உ 

# ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம்



1946

உ

செந்திலாண்டவன் துணை

# ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம்

சோளிங்கபுரம் சித்தாந்த சரபம்

**ஸ்ரீ சிவ. அருணசிவ யோகியவர்கள்**

இயற்றியது.

இது

திருப்பனந்தாள், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள்
செந்தமிழ்க் கல்லூரியின் தமிழாசிரியர்

**வித்வான் ச. தண்டபாணி தேசிகரவர்கள்**

தொகுத்த திருமுறைத்திரட்டுடனும் குறிப்புரையுடனும்

மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் குமாரர்
S. கலியாணசுந்தரையரால்

சென்னை, கபீர் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பெற்றது.

இரண்டாம் பதிப்பு

1946

பார்த்திவஹ பங்குனிமீ

## SAIVA SIDDHANTA ENDOWMENT Rs. 60,000

TO

## BENARES HINDU UNIVERSITY

This Endowment is founded by **His Holiness Sri-la-sri Kasi Vasi Arulnandi Tambiran Swamigal Avergal of Kasi Mutt**, Tirupanandal, Tanjore District, in memory of the illustrious Founder of the Kasi Mutt at Benares, Sri-la-sri Kasi Vasi Kumaragurupara Swamigal. This is intended for the advancement and spread of Saiva Siddhanta Philosophy in Tamil and to provide for the purpose, a Chair in the Hindu University, Benares to be styled as "KASI VASI KUMARAGURUPARA SWAMIGAL SAIVA SIDDHANTA CHAIR."

2. This Endowment consists of Rs. 60,000 (Rupees sixty thousand only) in cash. The University shall invest this amount in interest-yielding Government Securities preferably 3½% Non-Terminable promissory notes.

3. The administration of the Fund is vested in the Hindu University, Benares.

4. A degree holder of any Recognised University who is not only conversant in Tamil and English, but also qualified as a lecturer in Tamil and Saiva Siddhanta Philosophy shall be appointed to the Chair by the University. He shall belong to Saiva Religion with implicit faith in Saiva Siddhanta and be able to lecture to College students in Tamil on the said Philosophy.

5. From out of the annual interest accruing on the Endowment Fund an amount not exceeding Rs. 2,000 (Rupees two thousand) per year shall be utilised towards the pay of the lecturer.

6. The unexpended interest of the Endowment Fund [due to (1) surplus left after meeting the pay of the lecturer and (2) temporary vacancy for want of a qualified lecturer for the Chair] shall be allowed to accumulate and added to the corpus of the Fund, until the capital of the Endowment amounts to Rs. 1,00,000 (Rupees one lakh.) Thereafter the interest accruing from the then capital Fund shall be utilised for meeting the pay of the lecturer over Rs. 2,000 at the discretion of the University. If any more surplus remains, then it shall be utilised for issuing pamphlets on Saiva Siddhanta Philosophy in Tamil, Hindi and English, and copies freely distributed to all the Universities. Five copies of the pamphlets shall also be sent to the Donor or to his Successors-in-interest.

7. If, at any time, the capital amount of Endowment along with the subsequent additions is tendered for payment by Government, it shall be competent for the University to invest the amount in Government Securities yielding higher interest.

8. The progress of the work done and an account of receipts and expenditure of the Fund shall be communicated annually to the Donor or to his Sucessors-in-interest.

9. The Endowment shall not be diverted to any purpose other than the one intended by the Donor.

**N.B.**—*Endowment accepted by the University Council, Benares.*

*Vide Council Secretary's letter No. P/9853 dated 28-1-1946.*

# SRI ARULNANDI SIVACHARYA SWAMIGAL SIVAGNANA SIDDHIAR LECTURESHIP ENDOWMENT

BY

*His Holiness SRILASRI Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal of Tirupanandal in memory of the late Srilasri Kasivasi Swaminatha Tambiran Swamigal Avergal, to encourage the study of and the spread of learning in the Saivasiddhanta Sastras.*

1. This Endowment was founded by His Holiness Srilasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal of Tirupanandal in memory of his predecessor the late Srilasri Kasivasi Swaminatha Tambiran Swamigal Avergal to encourage the study of and the spread of learning in Saiva Siddhanta.

2. The Endowment for the lectureship consists of Non-terminable Government Promissory Notes of the face value of Rs. 15,000. The interest on this investment shall be utilised for the honorarium for a series of lectures, not less than four in number annually at the Benares Hindu University and the Allahabad University. The honorarium shall be Rs. 400 unless revised later with the consent of the Donor and with a view to lectures being given in other Indian University centres. Such excess of income as there may be over the honorarium fixed will be added every year to the corpus of the fund. Should at any time the Syndicate consider that no applicant has shown sufficient ability to justify the delivery of the lectures in that particular year or

years, the amount of interest accrued shall be added to the corpus of the fund.

3. The terms and conditions of the lectureship are as follows:

(i) The course of lectures which shall be not less than four, three in the Benares Hindu University and one in the Allahabad University shall be delivered annually at the University centres fixed by the University on a subject explaining the principles of Saiva Siddhanta. The increase in the number of lectures shall be subject to the conditions in para 5 infra.

(ii) The lecturer shall be appointed every year by the Syndicate of the Annamalai University either from among the Hindu members of the staff of the University or other Hindus, experts in the Saiva Siddhanta Philosophy. Every year there shall be a new lecturer. The lecturer once selected may have a second turn only after the lapse of 12 years.

(iii) The lecturer shall be chosen irrespective of sex or caste.

(iv) The lecturer should within a month after the delivery of the lectures present to the Annamalai University as well as the Donor of this Endowment or his successors in interest, a copy of each of his lectures. The University may print and publish the lectures at the discretion of the Syndicate.

(v) The lectures shall be the result of a deep study of the sutras of (a) Sivagnana Siddhiyar, both Parapakkam and Supakkam and the six old commentaries on the Siddhiyar and (b) Sivaprakasam of Sri Umapathi Sivachariar.

(vi) The lectures shall be arranged in consultation with the Benares Hindu University and the Allahabad University immediately before or after the Dasarah holidays.

(vii) The lecturer shall bring on his return a pot of the holy waters of the Ganges for presentation to the Lord Sri Nataraja Shrine at Chidambaram for abishekam and intimate to the Donor his having done so when he sends a copy of his lectures as required in clause 3(iv) supra.

(viii) The honorarium shall be paid either in cash or by cheque.

4. It shall be competent for the Syndicate of the Annamalai University to invest in any Government or other trust securities (1) sums available from year to year for investment from the interest in excess over the honorarium as also (2) the capital amount of the investment in case the Government Securities in which the amount is now invested are tendered for payment by Government.

5. If, in the process of investment the face value of the Paper increases and an enhancement of income results either by addition of unspent amounts or by reinvestment, such additional income shall be utilised to increase the number of University centres at

which the lectures will be delivered and consequently the honorarium for the lecturer.

6. The Syndicate shall at the end of each year communicate to the Donor or to his successors in interest the name and address of the lecturer and the honorarium paid and if in any year no lecture is delivered the amount at credit at the end of the year and shall also publish the accounts in an important Tamil or English Daily Newspaper.

**Note**:—*The deed was approved by the Annamalai University in its Syndicate meeting held on 29th September 1944 and the Senate meeting held on 12th December 1944.*

உ

# பதிப்புரை

திருச்சிற்றம்பலம்

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

**ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம்** என்னும் இந்நூலை இயற்றிய பெரியார் சில நூற்றாண்டுகளுக்கு முன் சோளிங்கபுரத்தில் இருந்து விளங்கிய சித்தாந்த சரபம் **ஸ்ரீ சிவ. அருண சிவயோகியாரவர்கள்.** இதன் முதற் பதிப்பு 1944-ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்நூலின் அருமை, பெருமை முதலியன பின்னேயுள்ள முகவுரையால் நன்கு விளங்கும்.

இரண்டாம் பதிப்பாகிய இதில் ஐந்தெழுத்தின் பெருமையை விளக்கும் பன்னிரு திருமுறைகளிலிருந்து தொகுக்கப்பெற்ற திரட்டும் குறிப்புரையும் சேர்க்கப் பெற்றுள்ளன.

சைவமும் தமிழும் தழைத்தோங்க வேண்டுமென்பதையே முக்கிய நோக்கமாகக் கொண்டு இப்போது திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்களாக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி **அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள்** பொருளுதவியைக்கொண்டு இப்பதிப்பு வெளிவருகின்றது. சுவாமிகளவர்கள் சைவ சித்தாந்த சம்பந்தமாகவும் தேவார சம்பந்தமாகவும் அமைத்துள்ள அறச் செயல்களும் பரிசுகளும் பல. அவற்றுட் சிலவற்றின் விவரங்களை இப்புத்தகத்திற் காணலாம்.

காசி மடத்தில் 19-ஆம் பட்டத்தில் விளங்கிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி **சுவாமிநாத சுவாமிகளவர்கள்** என் தந்தையாரவர்களிடத்தும் என்னிடத்தும் மிக்க அன்புடையவர்கள். அவர்களுடைய ஞாபகார்த்தமாக இப்பதிப்பை வெளியிடும் தொண்டு எனக்குக் கிடைத்ததை ஒரு பெரும்பாக்கியமாக எண்ணுகிறேன்.

இப்பதிப்பு அச்சாகி வருகையில் ஒப்புநோக்குதற்கு உதவி செய்தவர் காசி மடத்து ஆயிரம் ரூபாய் தமிழ்ப்பரிசை முதன்முறை பெற்றவரும் சென்னை, கிறிஸ்தவக் கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியருமாகிய ஸ்ரீ. **வி. மு. சுப்பிரமணிய ஐயர் B. O. L.** அவர்கள் ஆவர்.

இப்பதிப்பு வேலை மிக்க அவசரத்தில் நடந்ததால எதிர்பாராத சில தவறுகள் இருக்கக்கூடும். அவற்றைப் பொறுத்துக்கொள்ளும்படி அன்பர்களை வேண்டுகிறேன்.

திருவேட்டீசுவரன்பேட்டை
25—3—46

இங்ஙனம்,
S. கலியாணசுந்தர ஐயர்

# முகவுரை

" வாயிலே வைக்கும் அளவின் மருந்தாகித்
தீய பிறவிநோய் தீர்க்குமே—தூயவே
கம்பெருமா தேவியொடு மன்னு கயிலாயத்
தெம்பெருமான் ஓரஞ் செழுத்து."

உலகம் இன்பத்தையே விரும்புகிறது. இன்பம் இருவகையான் எய்தப்பெறும். ஒன்று இன்பந்தரும் பொருள்களின் சேர்க்கையால் ஆவது. மற்றொன்று துன்பநீக்கத்தால் ஆவது. உதாரணமாகச் சுரநோயாற் பீடிக்கப்பெற்றான் ஒருவன் மருந்து உண்டான். நோய் நீங்கினான். இன்பம் பெற்றான். மற்றவன் ஐந்து இந்திரியங்களுக்கும் இன்பந்தரும் பொருளை எய்தினான். இன்பம் பெற்றான். இரண்டும் இன்பப் பேறுகளே. ஆயினும் சாதனங்கள் வேறு. துன்பம் நீக்கத்திற்குரியன இன்பப் பொருள் ஆகா. இன்பப் பொருள்கள் துன்பநீக்கத்திற்கு ஆகா. நாம் இருவினைக்கிடாகப் பெருந்துன்பத்திடையே வருந்துகிறோம். அத்துன்பமோ பிறவித்துன்பம். மனித வாழ்வின் முழு லக்ஷ்யமாக அடையத்தக்க இன்பமோ அழியாத பேரின்பம். இவ்விரண்டினையும் ஒரு சேர அளிக்கத்தக்க மருந்து திருவைந்தெழுத்து ஒன்றே. அது வாயிலே வைத்தாற் போதும் பிறவிநோய் நீக்கும் என்று அருள்வழி யொழுகும் அறிவுடைப் பெருந்தகை நக்கீரர் அறிவிக்கின்றார். இம்மந்திரமே மற்ற மந்திரங்கட்கெல்லாம் அரசு. ஆதலால் இதனை மந்திர ராஜா என்றும் மந்திரேசுவரன் என்றும் சிவபுராணங்கள் சொல்லுகின்றன.

இம்மந்திரமே ஆன்மாக்களை அநாதியே பந்தித்து நிற்கும் ஆணவ மலத்தின் வலியொடுக்கி வறுத்த வித்துப்போல மீண்டும் சேட்டியாதவாறு செய்வது. மக்களனைவருக்கும் இன்றியமையாத கடமைகளை எடுத்து ஓதுகின்ற சிவஞான தான வள்ளலாகிய

ஸ்ரீ குருஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் "ஆசையறுய்" என்ற திருப்பாடலில் "நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய் மனமே உனக்கென்ன வாய்" என்று உரைத்தருளுகிறார்கள்.

பண்டு :—

இம் மந்திரத்தின் வலிமையாலேயே எல்லா ஆன்மாக்களையும் கருக்கடலிலிருந்து கரையேற்றக் கனிந்த பாடல் பல அருளிச் செய்த **அப்பரடிகள்** கருங்கல்லையே தெப்பமாகக் கொண்டு கருங் கடலினின்று கரையேறினார்கள். இசையொடு தமிழ் பரப்பும் **ஞான சம்பந்தப்பெருமான்** தாளவரம்போடு தமிழ் பாடப் பெருந்துணை செய்தது திருத்தாளத்திற் பொறிக்கப் பெற்ற திருவைந்தெழுத்தே. நெல்வாயிலரத்துறையில் அடிகள் தம் அருளாற் கிடைத்த சோதி முத்துச் சிவிகையின் மேல் ஆதியாரருள் என்று சொல்லி ஏறியதும் ஐந்தெழுத்தே. சொன்மாலை பயில்கின்ற **சுந்தரர்** நாவிற் கினிமை தந்ததும் ஐந்தெழுத்தே. **வாதவூரடிகளை** 'நமச்சிவாய வாஅழ்க' என நாநவின்றேத்த மாணிக்கவாசகன் ஆக்கியது எது? திருவைந்தெழுத்தே.

இன்று :—

தீரா நோய் உற்று அல்லல் உறுவார்க்கு அருந்துணையாய் மந்திரிக்கப் பெறுவது எது? திரு மந்திரமே. பேயாற்புடையுண்டு, பில்லி முதலிய செய்வினைகளால் துன்புறுவாரைத் துன்பந்துடைப்பது எது? திருவைந்தெழுத்தே. வசிய முதலிய எட்டு வித சித்திகளையும் சேர்ப்பித்து மக்களில் தேவராக மதிக்கச் செய்வது எது? ஸ்ரீ பஞ்சாட்சரமே.

இவ்வாறு பண்டும், இன்றும், என்றும் எல்லாப் பயனையும் இனிது தரவல்லதாகிய ஸ்ரீ பஞ்சாட்சரத்தை விதிப்படி யுணர்ந்து ஓதவல்லார் பொருள் தெரிந்து, முறை தெரிந்து, பெருமை யறிந்து ஓதுதல் வேண்டும் என்ற பெருங்கருணை ஒரு ஞான தான வள்ளலின் திருவுள்ளத்து எழுந்தது. அந்த வள்ளற்பெருமான் 300 ஆண்டுகட்கு முன் விளங்கிக் கன்னியாகுமரி முதல் இமயமலைவரை தமிழொடு சைவசித்தாந்தம் பரப்பிய தமது முதல்வர் போல இன்றைக்கும், பின் என்றைக்கும் சைவசித்தாந்தத்தேனைக்

காசிப் பல்கலைக் கழகத்துள்ளாரும் பருக அறுபதினாயிரம் ரூபாய்களை மூலதனமாக அளித்துள்ளார்கள். இளைஞர் உள்ளத்து இசையுந் தமிழும் என்றும் குடியிருக்க, திருவாரூர், சீகாழி, திருவையாறு முதலிய தலங்களில் தேவாரப் பரிசுகள் ஏற்படுத்தியுள்ளார்கள். "பீடத்துச்சி வைத்தது பசும்பொன் ஆயிரக் கிழியொன்று" என்ற நிகழ்ச்சியை நாம் காட்சியிலும் உணர ஆண்டுதோறும் ஆயிரம் ரூபாயை நாவலர் ஒருவருக்கு அளித்து வருகின்றார்கள். தமிழ் வளம்பெறச் செய்த முதல்வரே போலத் திருப்பனந்தாளில் 19-ம் பட்டத்து எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ **காசிவாசி சாமிநாத சுவாமிகள்** பேரால் செந்தமிழ்க் கல்லூரி நிறுவி மாணவர் பலருக்கும் உணவும் உறையுளும் நல்கிக்காத்து வருகிறார்கள். அவர்கள் ஸ்ரீ காசி மடத்து இருபதாவது பட்டத்து எழுந்தருளியிருக்கின்ற **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள்** ஆவார்கள். அவர்கள் திருவுள்ளக் கருத்தின்படி சோளிங்கபுரம், சைவ சித்தாந்த சரபம், சிவ. அருணசிவ யோகியார் அவர்கள் எழுதிவைத்திருந்த ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம் என்ற அரிய கட்டுரை நூல் பல பிற்சேர்க்கைகளுடன் வெளிவருகிறது.

இதன் கண், ஐந்தெழுத்தின் பெருமையும், அதன் பொருளும் அது வேதங்களிடையே விளங்கும் சிறப்பும் முறையும், அதனை விதிப்படி யோதுவார் எய்தும் பயன்களும், அதன் வகைகளும், அதனை ஓதுதற்குரியார் இவர் என்பதும் ஆகிய பல அருங் கருத்துக்கள் சமய சாத்திரங்களும், தோத்திரங்களுமாகிய விதி நூல்களின் வரம்பு கடவாது வகுக்கப் பெற்றுள்ளன. இந்த இரண்டாம் பதிப்பில் அருநூல்களை ஆய்வார் உள்ளம் ஒருசேரக் கண்டுகளிக்கப் பன்னிரு திருமுறைகளிலும் எங்கெங்கே பிரணவம், தூலம், சூக்குமம், காரணம் ஆகிய பஞ்சாக்ஷர வகைகள் எடுத்தாளப் பெற்றுள்ளனவோ அவைகள் பிற்சேர்க்கையாகத் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. அப்பாடல்களுக்குக் குறிப்புரையும் எழுதப்பெற்றுள்ளது.

மற்றும், சந்தானத்தை யளிக்கவல்லதும், வியாதியை நீக்க வல்லதும், யோகசித்தியெல்லாம் அளிக்க வல்லதும் முதலாகிய நூற்றிருபத்தைந்து வகைகளாகத் திருவைந்தெழுத்து விளங்குவதை ஐந்தெழுத்தின் மாறலாயுள்ள நூற்றிருபத்தைந்து வகைகளும் சேர்க்கப் பெற்றுள்ளன.

இவ்வண்ணம், சிவயோகியர் உள்ளத்து ஊற்ருய்ச் சிவ ஞானியர் சிந்தை தெளிக்குந் தேனய் இருக்கின்ற திருவைந்தெழுத்தின் விளக்கத்தை, திருமுறைத் தொகுப்பினைக் குறிப்புக்களுடன் சேர்த்து வெளியிடப் பெருங்கருணை புரிந்து, இந்தச் சிவத்தொண்டில் ஈடுபடுத்திய ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் திருவடிகட்கு என்று நீங்கா எளியேன் வணக்கம் உரித்தாகும்.

இங்ஙனம், வழியடிமை கொள்ளும் ஸ்ரீ செந்திலாண்டவன் திருவருளுக்கு என் வணக்கத்தைச் சமர்ப்பிக்கின்றேன்.

திருப்பனந்தாள்
20-3-46.

வித்வான் ச. தண்டபாணி தேசிகர்

# அஷ்ட சித்தியளிக்கவல்ல பஞ்சாக்ஷரம்

| | | | | |
|---|---|---|---|---|
| சிவயநம | வயநமசி | யநமசிவ | நமசிவய | மசிவயந |
| சிவமநய | வயசிமந | யநவசிம | நமயவசி | மசிநயவ |
| சிவநமய | வயமசிந | யநசிவம | நமவயசி | மசியநவ |
| சிவயமந | வயநசிம | யநமவசி | நமசியவ | மசிவநய |
| சிவநயும | வயமநசி | யநசிமவ | நமவசிய | மசியவந |
| சிவமயந | வயசிநம | யநவமசி | நமயசிவ | மசிநவய |
| சியநமவ | வநமசிய | யமசிவந | நசிவயம | மவயநசி |
| சியவமந | வநயசிம | யமநவசி | நசிமயவ | மவசிநய |
| சியமவந | வநசியம | யமவநசி | நசியமவ | மவநசிய |
| சியநவம | வநமயசி | யமசிநவ | நசிவமய | மவயசிந |
| சியமநவ | வநசிமய | யமவசிந | நசியவம | மவநயசி |
| சியவநம | வநயமசி | யமநசிவ | நசிமவய | மவசியந |
| சிநமவய | வமசியந | யசிவநம | நவ:யமசி | மயநசிவ |
| சிநயவம | வமநயசி | யசிமநவ | நவசிமய | மயவசிந |
| சிநவயழ | வமயநசி | யசிநமவ | நவமசிய | மயசிவந |
| சிநமயவ | வமசிநய | யசிவமந | நவயசிம | மயநவசி |
| சிநவமய | வமயசிந | யசிநவம | நவமயசி | மயசிநவ |
| சிநயமவ | வமநசிய | யசிமவந | நவசியம | மயவநசி |
| சிமவயந | வசியநம | யவநமசி | நயமசிவ | மநசிவய |
| சிமநயவ | வசிமநய | யவசிமந | நயவசிம | மநயவசி |
| சிமயநவ | வசிநமய | யவமசிந | நயசிவம | மநவயசி |
| சிமவநய | வசியமந | யவநசிம | நயமவசி | மநசிவ்ய |
| சிமயவந | வசிநயம | யவமநசி | நயசிமவ | மநவசிய |
| சிமநவய | வசிமயந | யவசிநம | நயவமசி | மநய்சிவ |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம்



## யஜுர்வேத பஞ்ச ப்ரஹ்மோபநிஷத்

1. பஞ்சாக்ஷர மயம்சம்பும் பரம்ப்ரஹ்ம ஸ்வரூபிணம்
நகாராதி யகாராந்தம் ஜ்ஞாத்வா பஞ்சாக்ஷரம் ஜபேத்.

(இதன் பொருள்.) பரப்ரஹ்ம ஸ்வரூபமாயுள்ள பஞ்சாக்ஷரத்தைத் தன் மயமாகக் கொண்டவர் சம்பு. பஞ்சாக்ஷரம் நகாரம் முதல் யகாரம் இறுதியாக உள்ளதென அறிந்து ஜபிக்கக் கடவர்.

## அதர்வண வேத பஸ்ம ஜாபாலோபநிஷத்.

2. ஓமித்யக்ரே வ்யாஹரேத் நம இதி பச்சாத்
தச்சிவா யேத் யக்ஷர த்ரயம்.

3. பரமோ மந்த்ரஸ் தாரகோயம் பஞ்சாக்ஷர:-

4. வேதாவதம் ஸம்சைவம் பஞ்சாக்ஷரம் ஜபம்தஸ்
தாரகம் ஸப்ரணவம் மோதமாநாஸ் திஷ்டந்தி.

(இ - ள்). (உ) ஓமென்று முதலில் சொல்லுக. நம என்று பின்னர். சிவாய என்னும் மூன்றக்ஷரத்தை அதன்மேல்.

3. இதனினும் மேலான மஹா மந்திரமாய தாரக மந்திரமில்லை.

4. வேதங்களுக்குப் பேரணியாயுள்ள சைவ பஞ்சாக்ஷரமாகிய தாரக மஹாமந்திரத்தைப் பிரணவத்துடன் ஜபித்துக் கொண்டு சந்தோஷமடைகின்றார்கள்.

## ஸ்ரீ ருத்ராத்யாயம் - நமகம்.

5. நமச்சிவாயச சிவதராயச.

(இ - ள்.) சிவன்பொருட்டு நமஸ்காரம். மிகவும் அன்பு செய்கிறவன்பொருட்டு நமஸ்காரம்.

மேலே உதஹரித்த சுருதிப் பிரமாணப்படி **நமச்சிவாய** என்பதுவே ஸ்ரீ பஞ்சாக்ஷரம். இது சைவர்கள் அனைவருக்கும் மூலதனமாயுள்ளது. வேதத்தின் ஹ்ருதயத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது. மந்திரங்களெல்லாவற்றிற்கும் நாயகமாயும், தாயகமாயுமுள்ளது. சிவத்தை அறிவதற்கு முக்கிய ஆதாரமாயிருத்தலின் சிவ மூல மந்த்ரம் எனவும், சிவ வாசகம் எனவும் சொல்லப்படுகின்றது. இம்மந்திரத்தை எல்லா வருணத்தாரும் ஜபிக்கலாம். இது ஸ்ரீ காசியில் சிவபெருமானால் உபதேசிக்கப்பட்டது. அப்பெருமானே இதற்குப் பரமாசாரியன். இதன் பொருளே பிரணவம்.

## பஞ்சாக்ஷரம் ஆரியவேத ஹ்ருதயம்

வேதமானது ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என நான்கு திறப்படும். அவற்றுள் நான்காவதாகிய அதர்வண வேதம் மற்ற மூன்றனுள் அடங்கியிருத்தலால் வேதம் **மூன்றே (த்ரயி)** என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. அம் மூன்றனுள் நடுவிலுள்ளது யஜுர் வேதம். அவ்வேதம் பன்னிரண்டு காண்டங்களாகப் பிரிந்து எண்பத்திரண்டு ப்ரச்னங்களுடையதாய் மாந்த்ரமெனவும், ப்ராஹ்மணமெனவும் இருவேறு வகைப்பட்டு விளங்காநிற்கும். அவற்றுள் முதற்கண்ணுள்ள மாந்த்ரமே ஸம்ஹிதா பாகமெனப்படும். அப்பாகம் ஏழு காண்டங்களுடையது. அவற்றுள்ளும் நான்காவதாகிய நடுக்காண்டமே ஏழு ஸம்ஹிதைகளை யுடையது. அவ்வேழனுள்ளும் நான்காவதாகிய நடு ஸம்ஹிதையின் நடுவே, ஸ்ரீ ருத்ராத்யாயம் என்னும் சதருத்ரீயமாகிய மஹா மந்த்ர ஸமூகம் மிளிர்கின்றது. அந்த சதருத்ரீயத்தின் நடுவே **நமஸ்ஸோமாயச ருத்ராயச** என்னும் அநுவாகத்தில் **நமச்சிவாய** என்னும் ஸ்ரீ பஞ்சாக்ஷரம் நாயகத்தன்மை பூண்டு பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. அப்பஞ்சாக்ஷரத்தின் நாப்பண் **சிவ** என்னும் அக்ஷரத்வய பதம் வெள்ளிடை மலைபோல் விளங்கு

கின்றது. இதனாலே சிற்றறிவும், சிறுதொழிலும், சின்னாளும், பலபிணியோடுங் கூடிய உயிர்களுக்கு இச்சிவ நாம ஸ்மரணையின் மிக்கது வேறொன்றுமில்லையென்பது தேற்றம்.

தமிழ் வேதமும், "வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாத நாம நமச்சி வாயவே" எனவும்,
"அருமறையி னகத்தானை" எனவும்

முழக்கியது.

திருமூலதேவரும் தமது **திருமந்திரத்தில்,**

"பழுத்தன வைந்தும் பழமறை யுள்ளே" என்றனர். இதனாலே வேதமாகிய மரத்தின் உச்சியிற் பழுத்த பழமும் ஸ்ரீ பஞ்சாக்ஷரமேயாம். சமயாதீதப் பழமுமிதுவே.

## பஞ்சாக்ஷரம் தமிழ்வேத ஹ்ருதயம்

தமிழ் வேதமானது திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம் (திருக்கடைக்காப்பு), திருநாவுக்கரசுமூர்த்தி சுவாமிகள் தேவாரம் (தேவாரம்), சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் (திருப்பாட்டு), மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம் என நான்கு வகைப்படும். முதல் மூன்றனுள் நான்காவதாகிய மாணிக்க வாசக சுவாமிகள் திருவாசகம் அந்தர்க்கதம். ஆதலால் வேதம் (தேவாரம் - மூவர் சொல்லுங் தமிழ்) - **மூன்றே** யாகும். அம் மூன்றனுள் நடுவிலுள்ளது திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம். அது மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளது. அவையாவன நான்கு, ஐந்து, ஆறு திருமுறைகள். அவற்றுள் நடுவிலுள்ளது ஐந்தாவது திருமுறை. அத்திருமுறை நூறு திருப்பதிகங்களை யுடையது. அவற்றுள் நடுவிலுள்ளது திருப்பாலைத் துறைத் திருப் பதிகம். அது பதினொரு திருப்பாக்களை யுடையது. அவற்றுள் நடுவிலுள்ளது ஆறுவது திருப்பா. அதன் நடுவே, "**விண்ணினார் பணிந்தேத்த**" என்னுந் திருப்பாவின் மத்தியில் **சிவாய** என்னும் முத்தி பஞ்சாக்ஷரம் பிரகாசித்தொளிர்கின்றது. இதனாலே, திரா விட வேதத்தின் நாப்பணும் **சிவநாமமே** மிளிர்கின்றமையால் ஆரிய வேதமே தமிழ் வேதமெனப்படும். திருமறைக்காட்டில் ஆரிய வேதம் பிணித்திருந்த திருக்கதவைத் தமிழ்வேதம் திறந்ததே இரண்டு வேதமும் ஒன்றென்பதற்குப் போதுமான மேற்கோளாம்.

## பஞ்சாக்ஷரத்திலுள்ள சிவநாமத்தால் ஆரியவேத முழுமையும் விளக்கமுறல்

பஞ்சாக்ஷரத்திலுள்ள சிவ சப்தத்தால் ஸ்ரீ பஞ்சாக்ஷரமும், ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தால் ஸ்ரீ ருத்ராத்யாயமும், ஸ்ரீ ருத்ராத்யாயத்தால் நடு ஸம்ஹிதையும், நடு ஸம்ஹிதையால் நடுக்காண்டமும், நடுக்காண்டத்தால் ஏழு காண்டங்களும், ஏழு காண்டங்களால் ஏனைய பகுதியுடன் கூடிய யஜுர்வேதமும், யஜுர் வேதத்தால் ருக், ஸாமம் என்னும் மற்றிரு வேதங்களும் விளக்கமுறுகின்றன. இதனாலே வேத முழுமையும் சிவமணம் வீசிக்கொண்டிருக்கின்றதென்பது வெளிப்படை. இவ்வுண்மையை,

### திருவாசகம்

"பரவுவா ரிமையோர்கள் பாடுவன நால்வேதம்" என்று உண்மை நிறுவியது. **ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத்**

"திக்வித்யாமசிவாச்ரயாம்"

(சிவனை ஆச்ரயிக்காத சாஸ்திரங்களை நெருப்பிலிடு) என்று உபதேசித்தது.

## பஞ்சாக்ஷரத்திலுள்ள சிவபதமே வேதபுருஷனுக்குக் கண்மணி

வேத புருஷராகிய சிவபெருமானுக்கு யஜுர்வேதம் சிரசாகவும், அவ்வேத மத்தியிலுள்ள ஸ்ரீ ருத்ராத்யாயம் முகமாகவும், அதன் நடுவிலுள்ள ஸ்ரீ பஞ்சாக்ஷரம் கண்களாகவும், அதனிடையிலுள்ள சிவ என்னும் அக்ஷரத்வயங்கள் கண்மணிகளாகவும் துலங்கா நிற்கும். இக்கருத்தையே உபப்ரஹ்மணமும் முடித்துக் கூறியது. இதனால் இவ்விரு அக்ஷரமாகிய சிவ நாமத்தை வாக்கினாலொருமுறை உச்சரிக்கின் அது விரைந்து பாவங்களையெல்லாம் நாசமாக்கும் என்றும் அதுவே மீளவும் வற்புறுத்தியது. "சண்டாளனாயினும் சிவ என்னும் மொழியைச் செப்புவானாயின் அவனொடு பேசுக. அவனொடு வசிக்க. அவனொடிருந்துண்ணுக" என்றது **முண்டகோப நிஷத்.** இதுவே பரப்ரஹ்மத்துக்கு இடுகுறிப்பெயர். மாண்டுக்கியம், ந்ருஸிம்ஹம், தர்சனம் முதலிய உபநிஷத்துக்களிலெல்லாம் இந்தச் சிவ என்ற சொல்லே துரிய ஸ்தானத்தில் பரப்ரஹ்ம சொல்லாகக் குறிக்கப்பட்டுள்ளது.

## பஞ்சாக்ஷரத்திலுள்ள சிவ நாமமே மிகவும் உத்கிருஷ்டம்

பதினெட்டு வித்தைகளுக்கும் சுருதி மேலானது. அச்சுருதியிலுள்ளும் ருத்ரைகாதசனியே நனிசிறந்தது. அதனிலும் ஸ்ரீ பஞ்சாக்ஷரமே மேலானது. அதனுள்ளும் **சிவ** என்னும் ஈரெழுத்தே மிகவும் உத்கிருஷ்டமானது என்று வேதோப ப்ரஹ்மணங்கள் ஒரே முடிபாய் எடுத்திசைத்தன.

## பஞ்சாக்ஷரமே எல்லாவற்றிற்கும் பிரேரக நிலையாதாரம்

இம்மந்திரத்திலுள்ள திருவைந்தெழுத்துக்களே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் **பூதங்களைந்தையும்**; சுரோத்திரம், த்வக்கு, சக்ஷு, ஜிஹ்வை, ஆக்ராணம் என்னும் **ஞானேந்திரியங்களைந்தையும்**; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னுங் **கர்மேந்திரியங்களைந்தையும்**; சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னுந் **தன்மாந்திரைகளைந்தையும்**; மனம், அகங்காரம், புத்தி, சித்தம், உள்ளம் என்னும் **அந்தக்கரண பஞ்சகத்தையும்**; நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்திய தீதை என்னுக் **கலைகளைந்தையும்**; கர்ம சாதாக்கியம், கர்த்துரு சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், சிவ சாதாக்கியம் என்னும் **சாதாக்கியங்களைந்தையும்**; கிரியாசக்தி, ஞான சக்தி, இச்சாசக்தி, ஆதிசக்தி, பராசக்தி என்னும் **சக்திகளைந்தையும்**; ஸத்தியோ ஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்னும் **பஞ்சப்ரஹ்மங்களையும்**; பிரமன், விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன், சதாசிவன் என்னும் **பஞ்சகர்த்தாக்களையும்**; ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்கிரஹம் என்னும் **பஞ்சகிருத்தியங்களையும்**: அகாரம், உகாரம், மகாரம், நாதம், விந்து என்னும் **பஞ்சவர்ணங்களையும்**, வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் என்னும் **பஞ்ச பக்ஷிகளையும்** தமக்குள் குறிப்பாயுணர்த்திக் கொண்டிருக்கின்றன. அன்றியும், சொற்கூற்றுப் பிரபஞ்சம், பொருட் கூற்றுப் பிரபஞ்சம் ஆகிய இவ்விரண்டிலுள்ள எல்லாவற்றிற்கும் இவைகளே பேராதாரமாய் விளங்கிக்கொண்டுள்ளன. இதற்குப் பிரமாணம் :—

### உண்மை விளக்கம்

அஞ்செழுத்தே யாகமமும் அண்ண லருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராணம் மனைத்தும்—அஞ்செழுத்தே

ஆனந்தத் தாண்டவமும் யாவைக்கு மப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்.

### திருமந்திரம்

அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கினன்
அஞ்செழுத் தாலே யமர்ந்து நின்றானே.

ஐம்ப தெழுத்தே யனைத்தும் வேதங்களும்
ஐம்ப தெழுத்தே யனைத்தா கமங்களும்
ஐம்ப தெழுத்தே யுமாவ தறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போ யஞ்செழுத் தாமே.

### பஞ்சாக்ஷரமே பலவகைச்சித்தியின் பொருட்டுப் பலபேத மாதல்

பஞ்சாக்ஷரமந்திரமே பிறப்பென்னும் பெருவியாதியினின்றும் நீங்கிப் பேரானந்தப் பெருநிலையை யடைவதற்குச் சிறந்த சாதனமாயிருப்பதோடு அவரவர் விருப்பத்தின்படி எழுத்துக்கள் மாறுதலால் ஸ்தம்பனம், மோஹனம், வச்யம், ஆக்ருஷணம், உச்சாடனம், வித்வேஷணம், பேதனம், மாரணம் என்னும் **அஷ்டகர்ம வித்தை** முதலிய சித்திகளையுங் கொடுக்கின்றது. மேலும், அதுவே ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமம், ஸத்யோஜாதம் என்னும் பஞ்ச ப்ரஹ்ம மந்திரங்களாகி, அவை ஒவ்வொன்றும் இருபத்தைந்தாக நூற்றிருபத்தைந்து பஞ்சாக்ஷரமந்திரங்களாய் விரிந்துள்ளன. அவற்றை விரிக்கின், **ஈசானமாகிய நகாரத்தில்** உச்சாடனத்துக்கு உபயோகமான அகோர பஞ்சாக்ஷர முதல் பரகாயப் பிரவேசத்தைப் பயக்க வல்ல ஸர்வ பஞ்சாக்ஷரம் இறுதியாக இருபத்தைந்து பஞ்சாக்ஷரமும், **தத்புருஷமாகிய மகாரத்தில்** வித்வேஷணத்தைத் தரவல்ல வித்வேஷண பஞ்சாக்ஷரமுதல் யக்ஷிணிகளைப் புரிய வல்ல யக்ஷிணிபஞ்சாக்ஷரம் இறுதியாக இருபத்தைந்து பஞ்சாக்ஷரமும், **அகோரமாகிய சிகாரத்தில்** ஸ்தம்பனஞ்செய்யவல்ல ஸ்தம்பன பஞ்சாக்ஷரமுதல் இந்திரனை அழைப்பிக்கவல்ல அகண்ட பஞ்சாக்ஷரம் இறுதியாக இருபத்தைந்து பஞ்சாக்ஷரமும், **வாமமாகிய வகாரத்தில்** வீக்கத்தை

யுண்டாக்க வல்ல பேத பஞ்சாக்ஷரமுதல் ஸர்வ பாஷைகளையும் அறியவல்ல ஸர்வபரிபாஷா பஞ்சாக்ஷரம் இறுதியாக இருபத்தைந்து பஞ்சாக்ஷரமும், ஸத்யோஜாதமாகிய யகாரத்தில் மூலாதாரத்தைத் தரிசிப்பிக்கவல்ல மூலாதார பஞ்சாக்ஷரமுதல் சதுஷ்பீடத்தைத் தரிசிக்கவல்ல சதுஷ்பீட பஞ்சாக்ஷரம் இறுதியாக இருபத்தைந்து பஞ்சாக்ஷரமும் ஆகிய திருவக்ஷரங்கள் ஐந்தினின்றும் நூற்றிருபத்தைந்து பஞ்சாக்ஷரங்களுண்டாகி ஆத்மாக்களுக்கு வேண்டிய பேற்றை யளித்துக்கொண்டிருக்கின்றன. இவற்றின் விரிவெல்லாம் ருத்ரயாமளம், ஆமநாயம் முதலிய நூல்களுள் பரந்து கிடக்கின்றன. சிற்பரச்செல்வர்களாகிய சிவஞானிகளுக்கு மேற்சொன்ன சித்திகள் யாவும் தாமே ஏவல் செய்யும். அவர்கள் அவற்றைக் கற்கவேண்டிய அவசியமில்லை. அவைகள் தாமே வந்து பொருந்தும்.

## பஞ்சாக்ஷரமும் பிரணவமும் அபேதமெனல்

பஞ்சாக்ஷரம் பிரணவத்துக்கு அகத்துறுப்பாயும், உள்ளொளியாயு மிருத்தலினலே பல்வகைச் சித்தியின்பொருட்டுத் தொகை ஏறியுங்குறைந்தும் வரும். அப்போது அதனோடு பீஜங்களும், பதங்களும் சேர்ந்துவரும். அங்ஙனஞ்சேர்ந்து பலவகையாய்ப் பேதப்பட்டு வரினும் அவையாவும் ஸ்ரீ பஞ்சாக்ஷரமேயாம். எட்டெழுத்தும், ஆறெழுத்தும், நாலெழுத்தும், பிஞ்செழுத்தும் மேலைப்பெருவெழுத்தும், பேசுமெழுத்தும் பேசாவெழுத்தும் ஆகிய இவை யாவும் பஞ்சாக்ஷரமென்றே கூறப்படும். பஞ்சாக்ஷரமே பிரணவப் பொருளாய் விளங்குதலானும், பிரணவமே பஞ்சாக்ஷரமாயிருத்தலானும் இரண்டும் தம்மில் பேதமில்லாத தனிமந்திரங்களாம். ஆதலால் பஞ்சாக்ஷரத்தின் முதலில் பிரணவமிருக்கவேண்டியதவசியமில்லை. பிரணவம் வேறு துணைவேண்டாது உச்சரிக்கப் படுவதுபோல் பஞ்சாக்ஷரமும் வேறொன்றின் ஆச்ரயமின்றித் தானே தனித்தியங்கிப் பயன்தரும். ஆகையினலே அவை யிரண்டும் தனிமந்திரங்களாம். சில சந்தர்ப்பங்களில் பிரணவத்தைப் பஞ்சாக்ஷரத்தோடு சேர்த்து உச்சரிப்பதுமுண்டு. அப்படி உச்சரிப்பதால் வரும் இழுக்கு ஏதுமில்லை. சாரைப்பாம்பு என்று சொன்னபோது சாரையாகிய பாம்பு என்று பொருள்படுவது போல் ஓம் நமச்சிவாய என்று உச்சரிக்கும்போது ஓங்காரமாகிய நமச்சிவாய என்றே பொருள்கொள்க. இதற்குப் பிரமாணம் :—

### திருமந்திரம்

நகார மகாரஞ் சிகார நடுவாய்
வகார மிரண்டும் வளியுடன் கூட்டி
ஒகார முதற்கொண் டொருக்கா லுரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே.

### உண்மை விளக்கம்

ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனில்
நீங்கா வெழுத்தே நிறைசுடராம்.

### தாயுமான சுவாமிகள்

ஓங்கார மாமைந் தெழுத்தாற் புவனத்தை யுண்டுபண்ணிப்
பாங்காய் நடத்தும் பொருளே அகண்ட பரசிவமே.

இந்நூலின் உபக்கிரமத்தில் உதஹரித்த (2), (4) வேத வாக்கியங்களும் பஞ்சாக்ஷரத்தைப் பிரணவத்தோடு உச்சரிப்பதற்குப் போதிய சான்றும்.

### பிரணவமே பஞ்சாக்ஷரம்

**ஓம்** என்பதே பிரணவம். அது சமஷ்டிப்பிரணவமெனவும், வியஷ்டிப் பிரணவமெனவும் இருவகைப்படும். சமஷ்டிப்பிரணவம் தொகுத்துக்கூறுவது. அது **ஓம்** என்பதாம். வியஷ்டிப் பிரணவம் வகுத்துக்கூறுவது. அது **அ, உ, ம** என்பதாம். இந்த வியஷ்டிப்பிரணவமாகிய அகார உகார மகார மூன்றும் முறையே ஸத்வ ரஜ தமோ குணங்களையும், பிரமவிஷ்ணு ருத்ரர்களையும், கார்ஹபத்திய தக்ஷிண ஆஹவநீயாக்னிகளையும், ருக், யஜுர், ஸாமவேதங்களையும், பூமி, அந்தரிக்ஷம், ஸவர்க்கலோகங்களையும், வசுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள் என்ற பிதுர்க்களையும், காயத்ரீ, திருஷ்டுப், ஜகதீ என்ற சந்தங்களையும், பூ:, புவ:, ஸுவ: என்ற வ்யாஹிருதிகளையும் பொருளாகக் கொண்டுள்ளன. **அகாரம்** வாய்திறத்தலினாலேயே ஸ்ருஷ்டியையும், **உகாரம்** இதழ் குவித்தலினாலேயே ஸ்திதியையும், **மகாரம்** வாய் மூடுதலினாலேயே ஸம்ஹாரத்தையும் குறிப்பிக்கின்றமையால் சொல் பொருளென்னும் இருவகைப் பிரபஞ்சங்களும் இந்தப்பிரணவத்திலே தோன்றி நின்று ஒடுங்குமென்றறிக. ஆயின், **ஓம்** என்னும் சமஷ்டிப்

பிரணவம் எதைக்குறிக்குமெனின், மேற் சொன்ன அகார உகார மகாரம் என்னும் பாதங்கள் (அம்சங்கள்) மூன்றுமாத்திரையைக் குறிக்க, நான்காவதாயுள்ள இந்த ஓங்காரமென்னும் பாதம் **அர்த்த மாத்திரையாகும்.** அது மிக ஸூக்ஷ்மமான நாதரூபம். அதற்கு அதிதேவதை துரீயமூர்த்தியான உமையுடன்கூடிய **பரமசிவம்.** அம்மூர்த்தியையே உத்தமோத்தம புருஷனென்று வேதங்கூறும். அந்த அர்த்தமாத்திரை ஷாட்குணங்களையும், ஆதர்வர்ணிகளின் அக்கினியையும், அதர்வணவேதத்தையும், ஸோமலோகத்தையும், மருத்துக்களை (கணதேவதைகளை)யும், விராட் என்னும் சந்தத்தையும் பொருளாகக் கொண்டுள்ளது. இவற்றால் பிரணவத்தின் நான்கு பாதங்களும், சதுர்த்த ப்ரஹ்மமும் விளக்கப்பட்டன.

## அதர்வணவேத ந்ருஸிம்ஹ தாபந்யோபநிஷத்

அகாரம் ப்ரஹ்மாணம் நாபௌ உகாரம் விஷ்ணும்ஹ்ருதயே
மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே ஓங்காரம் ஸர்வேச்வரம் த்வாத சாந்தே.

இவ்வாசகம் அகாரம் பிரமனுக்கும், உகாரம் விஷ்ணுவுக்கும், மகாரம் உருத்திரனுக்கும், ஓங்காரம் ஸர்வேச்வரராகிய திரிமூர்த்திபருக்கும் உரியனவென்றும், அவர்கள் முறையே நாபியிலும், ஹ்ருதயத்திலும், புருவமத்தியிலும், துவாதசாந்தத்திலும் வீற்றிருக்கின்றார்களென்றுந் தெரிவிக்கின்றது. இதனால் கிருத்தியகர்த்தாக்களாகிய பிரமன், விஷ்ணு, ருத்ரர்கள் அகார உகார மகாரங்களில் வசிக்கின்றவர்களேயன்றி அவர்களொருவருக்காவது அவ்வக்ஷரங்கள் உரியனவல்ல. அவ்வக்ஷரங்களுக்கும் அவற்றையுடைய ஓங்காரத்துக்கும் உரியவர் **சதுர்த்தவாச்சிய**ராகிய சிவபெருமானே யாவர். ஆதலால் ஓங்காரமாகிய பிரணவம் மும்மூர்த்திகளுக்குப் பிறப்பிடமாயும், மூர்த்தித்திரயாதீத பரப்ரஹ்மத்துக்கு இருப்பிடமாயுமுள்ளது. அவ்வாறுள்ள ஏகாக்ஷரமாகிய ஓங்காரமே மூன்றெழுத்தாயும், அம்மூன்றுங்கூடி **ஓம்** என்று எழுதும்போது விந்துவாயும், **ஓம்** என்று உச்சரிக்கும் போது நாதமாயும் விரிதலால் முதல் மூன்றெழுத்தும், இந்த விந்து நாதங்களாகிய வரிவடிவும் ஒலிவடிவுங்கூடி ஐந்தெழுத்தாயிற்றென்பது வெளிப்படை.

## காமிகாகமம்

" ப்ரதமம் தாரகாகாரம் த்விதீயம் தண்டமுச்யதே
த்ருதீயம் குண்டலாகாரம் சதுர்த்தம் ஹ்யர்த்தசந்த்ரகம்
பஞ்சமம் பிந்துஸம்யுக்தம் ப்ரணவம் பஞ்சலக்ஷணம் "

என்ற வாக்கியத்தின்படி முதலாவது நக்ஷத்திராகாரமும், இரண்டாவது தண்டாகாரமும், மூன்ருவது குண்டல வடிவும், நான்காவது அர்த்த சந்திரவடிவும், ஐந்தாவது பிந்துவோடியைந்த வடிவும் ஆகிய ஐந்து உறுப்புக்களுடைமையின் பிரணவமும் ஐந்து கலைகளையுடைய தாயிற்று. இவ்வைங்கலைகளுள் **நக்ஷத்திரவடிவம் நகாரம்** எனவும், **தண்ட வடிவம் மகாரம்** எனவும், **குண்டல வடிவம் சிகாரம்** எனவும், **பிறைவடிவம் வகாரம்** எனவும், **வட்ட வடிவம் யகாரம்** எனவுஞ்சொல்லப்படும். இதனாலும் பிரணவமே பஞ்சாக்ஷரமாயிற்று.

மேலும், ருக்வேத முதன் மந்திரத்து **முதல்** அக்ஷரம் அகாரமாயும், மத்திய மந்திரத்து **மத்திய அக்ஷரம்** உகாரமாயும், இறுதி மந்திரத்து **இறுதி அக்ஷரம்** மகாரமாயும் போந்தமையின் ருக்வேத முழுமையும் பிரணவ சொரூபமாயிற்று. இந்தப் பிரணவத்தை விளக்கவே, இரண்டாவதாகிய யஜுர் வேதமெழுந்து முதலிலும் இறுதியிலும் பிரணவத்தைக் கூறி இடையில் பஞ்சாக்ஷரத்தை யோதிப் பொலிவெய்தியது. அவ்வாறே தமிழ் வேதமும் நடுவில் முத்தி பஞ்சாக்ஷரத்தை யமைத்துக்கொண்டு பிரகாசித்தொளிர்கின்யது. இவற்ருலும் பிரணவமே பஞ்சாக்ஷரமாயின வாறறிக. பிரணவத்துக்கும் பஞ்சாக்ஷரத்துக்கு முள்ள அநந்யத்துவத்தை ஓர் உபமான வாயிலாகவும் விளக்குதும். நெல்லுக்கு அரிசி எப்படி உள்ளீடோ அதுபோலப் பிரணவத்திற்குப் பஞ்சாக்ஷரம் உட்கிடையாம். நெல்லினதுபலன் அரிசியாவதுபோல் பிரணவத்தின்பலன் ஸ்ரீ பஞ்சாக்ஷரமேயாம். அரிசியாலடையப் பெறுவது அன்னம். பஞ்சாக்ஷரத்தால் அடையப்பெறுவது அத்வைதஞானம். அன்னத்தால் கிடைப்பது பசியின்மை, திருப்தி, இன்பம். அத்வைத ஞானத்தால் கிடைப்பது மும்மல நீக்கமும், சிவபூரணநிறைவும் (அதாவது ஆன்மாவினிடத்து அருள்விளக்கமென்னும் பரவெளி மேலிடலும்), அத்வைதானந்த முத்தியுமாம்.

## தத்துவமசியும், பிரணவமும் பஞ்சாக்ஷரமும் ஒரே பொருளைக் குறிக்கும் வாக்கியங்கள்

ஸாமவேத ஸாரமாகிய சாந்தோக்கிய உபநிஷத்தின்கண்ணுள்ள **தத்துவமசி** என்னும் மஹாவாக்கியத்துக்குப் பொருள் **தத்** பரமாத்மாவாகிய ப்ரஹ்மத்துக்கும், **த்வம்** ஜீவாத்மாவாகிய உயிருக்கும், **அசி** அருட்சத்தி வாயிலாக ஐக்கியமென்று சொல்லப்படுகிறது. அவ்வாறே பிரணவத்துக்கும் **அ**காரமாகிய சிவத்துக்கும் **ம**காரமாகிய ஜீவனுக்கும், **உ**காரமாகிய அருள்வாயிலாக ஐக்கியமென்று பொருள்படுகின்றது. அன்றியும், பஞ்சாக்ஷரத்திலும் **சிவ** பரமாத்மாவாகிய சிவத்துக்கும், **நம** ஜீவாத்மாவாகிய பசுவுக்கும், **ஆய** அருட்சத்தி வாயிலாக ஐக்கியமுண்டாமென்று அர்த்தம் பிரகாசிக்கின்றது. இவைகளே வேதோக்தமான வியாக்கியானம். இதனாலே மஹா வாக்கியமாகிய **தத்துவமசியும்**, ஓங்காரமாகிய **பிரணவமும்**, திருவைந்தெழுத்தாகிய **பஞ்சாக்ஷரமும்** ஒரே பொருளை விளக்கவெழுந்தன வென்பதாம். இவ்வுண்மை யறியாத சிலர் ஸம்ஸ்கிருதத்தை உயர்த்தியும் தமிழைத் தாழ்த்தியும் பேசுவதுபோல் பிரணவத்தை உயர்வாகவும் பஞ்சாக்ஷரத்தைத் தாழ்வாகவும் கூறுநிற்பர். இது அறியாமையேயாம். பண்டைய தீவினைப் பயனுமாம்.

### பஞ்சாக்ஷர வகைகள்

திருவைந்தெழுத்துக்களைக் கொண்ட ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகிய மஹா மந்திரம் சாதக அதிகாரிகளின் பக்குவ தாரதம்மியத்துக்குத் தக்கவாறு ஓதுமுறையில் ஐந்து வகையாகக் கூறப்பட்டுள்ளது. அவை ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம், மஹா காரணம், மஹா மநு என்பனவாம். அவையாவன :

| | | |
|---|---|---|
| (1) | ஸ்தூல பஞ்சாக்ஷரம் | **ந ம சி வா ய** |
| (2) | ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் | **சி வா ய ந ம** |
| (3) | காரண பஞ்சாக்ஷரம் | **சிவாயசிவ** |
| *(4) | மஹா காரண பஞ்சாக்ஷரம் | **சிவ** |
| (5) | மஹா மனு | **சி.** |

---

* பஞ்சாக்ஷரங்கள் தூல, சூக்ஷ்ம, காரணம் என்ற மூன்றே. மற்ற மஹாகாரணம், மஹா மனு என்பன ஏகான்ம வாதிகள் முடிபு பற்றி நுழைந்தனவாகும். " முத்தியினும் மூன்று முதலும்

## ஸ்தூல பஞ்சாக்ஷர விளக்கம்

**நமசிவாய** என்னும் ஸ்தூல பஞ்சாக்ஷரம் நகாரத்தை முதலிலும் **யகாரத்தை** யிறுதியிலும் வைத்தோதுவது. அது போதகாசாரியராலும் ஸாதகாசாரியராலும் உபதேசிக்கப்படுவது. இம்மைப்பயனும் மறுமைப்பயனும் பயப்பது. எல்லா வருணத்தாராலும், அதீக்ஷிதராலும் ஆச்ரயிக்கத்தக்கது. இதில் முதல் நின்ற நகார மகாரங்கள் பாசத்தையும், இடைநின்ற சிகார வகாரங்கள் பதியையும், கடைநின்ற யகாரம் பசுவையும் தெரிக்கா நிற்கும். இதனல் பாசமாகிய அசித்தையும், பசுவாகிய சித்தையும் இயக்குகின்றவன் பதியெனவும், அப்பதி இவ்விரண்டையும் உருவமாகக் கொண்டிருப்பதால் **விசுவ சொரூபி** எனவும், இவ்விரண்டுந் தொழிற்படத் தான் ஏதுவாய் நிற்றலால் **விசுவ காரணன்** எனவும், இவற்றிற்கு உடனய் நிற்றலால் **விசுவாந்தர்யாமி** எனவும், இவற்றைக் கடந்து விளங்கலால் **விசுவாதீதன்** எனவும், இவற்ருல் சேவிக்கப்படலால் **விசுவஸேவ்யன்** எனவும் போற்றப் படுகின்றனன். இம்மந்திரத்தைக் கிரமமாக ஓதிவரின் பல்வகைப் பட்ட துன்பங்களும் நிவிர்த்தியாவதோடு சித்த சுத்தியும், மல பரிபாகமும், சிவஞானமும் உண்டாகும். இதன் மஹிமைகளையெல்லாம் இந்நூலின் இறுதியில் காட்டியுள்ள தேவாரத் திருப் பதிகங்களா லோர்க. ஆளுடைய பிள்ளையார் இருபதிகங்களாலும், ஆளுடைய அரசும், ஆளுடைய நம்பியும் ஒவ்வோர் பதிகங்களாலும் தனித்தெடுத் தோதியுள்ளார்கள். ஆளுடைய வடிகளோ தம்முடைய மணி வாசகத்து முன்வைத்தோதி யருளினர். அன்றியும், நாவரசராகிய பெருந்தகையாகும் தம்மைச் சமண மாக்கள்

---

மொழிய'' என்ற சித்தாந்த மரபு ஆன்மா அழியக்கொள்ளும் கொள்கையை ஏலாது. அன்றியும் யகாரமாகிய ஆன்மா இல் வழி உணர்வானின்றிச் சிவத்தை யுணர்ந்து ஓதுஞ் செயல் நிகழாது. மற்றும் மஹா மனுவில் அருளையின்றிச் சிவமும், சிவத்தையின்றி அருளும் நில்லாதபோது அருட்சத்திக்குத் தோற்றம் ஒடுக்கம் கூறுதல் ஆகாது. அங்ஙனம் கூறின் ''அருளுண்டாம் ஈசற்கு'' என்ற சிவஞான போத வெண்பாவோடு முரணும். ஆகவே மஹா காரணம், மஹா மனு என்ற ஈரெழுத்து ஓரெழுத்துக்கள் ஐந்தெழுத்துக்களாகா என ஏற்ற இயைபு காட்டி மறுப்பாரும் உண்டு.

பழிபாவத்துக்கஞ்சாது நீற்றறையிலிட்ட போழ்து இம்மந்தி ரத்தைச் சொல்லியே யாதோர் இடையூறு மில்லாமல் விளங்கினர்.

## ஐந்தாம் திருமுறை

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

## திருவாசகமும்

"போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சிவாய புறமெனப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சிவாய சயசய போற்றி போற்றி"

என்றது.

## ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷர விளக்கம்

**சிவாயநம** என்னும் ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் **சிகாரவகாரங்களை** முதலிலும், **யகாரத்தை** இடையிலும், **நகாரமகாரங்களை** இறுதியிலும் வைத்தோதுவது. இது ஸ்தூல பஞ்சாக்ஷரத்தை நியமமாக அநுஷ்டித்துத் தீக்ஷைபெற்ற பரிபாகிக்கு முக்தியின் பொருட்டு உபதேசிக்கப்படுவது. இவ்வைந்தெழுத்துக்களுள் முதற்கண்ணுள்ள **சிகாரம்** சிவத்தையும், இரண்டாவதாய **வகாரம்** அருட்சத்தியையும், மூன்றுவதாய **யகாரம்** ஆன்மாவையும், நான்காவதாகிய **நகாரம்** திரோதானத்தையும், ஐந்தாவதாய **மகாரம்** ஆணவ மலத்தையும் உணர்த்துவனவாம். சிகார வகாரங்கள் **பதியையும்**, யகாரம் **பசுவையும்**, நகார மகாரங்கள் **பாசத்தையும்** விளக்குவனவாம்.

## உண்மை விளக்கம்

சிவனரு ளாவி திரோதமல மைந்தும்
அவனெழுத் தஞ்சி னடைவாம்.

ஈசனரு ளாவி யெழிலார் திரோதமலம்
ஆசிலெழுத் தஞ்சினடை வாம்.

### திருமந்திரம்

சிவனரு ளாய சிவன்றிரு நாமம்
சிவனரு ளான்மா திரோத மலமாயை.

சிவன்சத்தி தன்னுடன் சீவனுர் சேர
அவஞ்சேர்த்த பாசம் அணுககிலாவே.

### திருவருட்பயன்

ஊன நடனம் ஒருபா லொருபாலாம்
ஞானநடந் தானடுவே நாடு.

இம்மந்திரத்தின் நடுவில் **யகாரமாகிய ஆன்மாவை** நிற்கும்படி வைத்ததின் பரமரஹஸியம் யாதெனின்! அவ்வான்மா சத்தாகிய சிவத்தின் தன்மையையும், அசத்தாகிய பாசத்தின் தன்மையையும் அறிகின்ற அவற்றின் வேருயதோர் தன்மை யுடையதெனவும், அவ்விரண்டின் வியஞ்சகபுள்வழி விளங்குவதோர் முறைமை யுடையதெனவும், அவ்விரண்டின்பாலும் சார்ந்ததின் வண்ணமா யழுந்திச் சதசத்தென்னும் பேர்பெற்று நிற்குமியல்பினை யுடையதெனவும் விளக்குதற்பொருட்டே. இதனுல் ஆன்மா சத்துமன்று அசத்துமன்று; அவற்றின் வேருயதோர் சதசத்துப் பொருளாம். ஆகையினுலே ஆன்மா எக்காலத்தும் திருவருளைத் துணையாகக் கொண்டே பிறவிக் கடலை நீந்திப் பேரின்பத்தை யநுபவிக்க வேண்டியிருக்கின்ருன். **சிவாய** என்ற பதத்தில் சேர்த்துப் படிக்கப்பட்டிருத்தற்குங் காரணமிதுவே. இந்த ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்துக்கே **ஒருதலை மாணிக்கம்** என்றும், **முத்தி பஞ்சாக்ஷரம்** என்றும் பெயர். இம்மந்திரத்தில் சிவம், அருள், ஆன்மா, திரோதை, மலம் என ஐந்தும் முறையே நிற்றலால் வீடுபேற்றை விரும்புவோர் **நமசிவாய** வென உச்சரியாது **சிவாயநம** வென உச்சரித்தல் வேண்டும். அவ்வாறு உச்சரிக்க, அருளாகிய **வகாரம்** ஆன்மாவுக்குக் களைகணை **சிகாரத்தில்** சேர்த்து இன்பக் கடலி லழுத்துவிக்கும். ஈண்டு உச்சரிக்க என்றது உள்ளத்திலுன்னுதலைச் செப்பியதாகும். மந்திரங்களை யுச்சரித்தல் மானதம், மந்தம், உரையென மூவகைப்படும். அவற்றுள் **மானதமாவது** மனத்தால் தியானித்தல். அதாவது உள்ளத்துன்னுதல். **மந்தமாவது** ஸூக்ஷ்ம வைகரி வாக்கால் தன் செவிக்கு மட்டுங் கேட்கும்படி யுச்சரித்தல். **உரையாவது** ஸ்தூல வைகரி வாக்கால் தனக்கும் பிறருக்கும் கேட்கும்

படி யுச்சரித்தல். இம்மூன்றனுள் சுத்த மானதமாகிய அறிவாற் கணித்தலே சாலச்சிறப்புடைத்தாம். பலனும் ஒன்றுக்கொன்று ஆயிரமாயிரமாகவும் லட்சம் லட்சமாகவும் அதிகமாகும். இத் தகைச் சிறப்பு வாய்ந்த ஓசைதரு மஞ்செழுத்தாகிய ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தை ஆசாரியன் உபதேசித்த விதிப்படியே நெஞ்சி லழுத்தி யுச்சரித்து, ஜனன மரணங்கட்கு உட்படுத்தும் நகார மகாரங்களாகிய ஊன நடனத்தை அறவே கைவிட்டு, சிகார வகாரங்களாகிய ஞான நடனத்தைப் பொருந்தி, வகாரமாகிய அருட்பெருவெளி மேலிட மேலிட உள்ளத்துன்னுதலாகிய உச்ச ரிப்பையும் விட்டு, அதில் நிறைந்து, ஜீவபோதமற்று, அதுதானாய் நிற்கவே அவ்வருள் சிகாரமாகிய ஞேயத்திலழுத்திக் கேவலம் **அறிவாகாரமாய்** நிற்கும் வண்ணஞ் செய்யும். அதுவே பரமுத்தி என்னும் அத்வைதானந்த முத்தியாம். அதனையே நம் **மணிவாசகப் பெருமாள்,**

**கோயின் முத்த திருப்பதிகம்**

" உடையாளுன்ற னடுவிருக்கும்
உடையா ணடுவு ணீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரும்
இருப்பதானால் " எனவும்
" முன்னின் றாண்டா யெனைமுன்னம்
யானுமதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன்
பிற்பட்டொழிந்தேன் பெம்மானே " எனவும் வரும்

திருப்பாசுரங்களில் நன்கு விளக்கியுள்ளார். இதன் விரிவை எமது **திருவாசகக் குறிப்புரையினும் விஷய சூசனத்தினுங் காண்க.** இவ் வனுபவ ரஹஸியங்களை யெல்லாம் குருபரன் றிருத்தாளைச் சேர்ந்து, அவனை முறையோடு வழிபட்டு, அவனது உபதேச வாயி லாக **ஓது முறையிலோதி, உணருமுறையில் உணர்ந்து, நிற்குமுறையில் நின்று** அறிந்து கொள்ளல் வேண்டும். அன்றியும், இப்பஞ்சா க்ஷரம் ஏகாக்ஷரமாக மாறும். வகாரத்தில் நகாரமும், யகாரத்தில் மகாரமும், சிகாரத்தில் வகாரமும் அதில் யகாரமும் ஒடுங்குமுறை அவனே யுபதேசிக்கற்பாலன். சிற்றறிவினராகிய நாமோ சிகா ரத்தை முதலாக ஓதுமுறையொன்றையே கவனித்து ஞான குருவை யடைதற் குரியவராகின்றோம். இவ்வுண்மையைக் கடைப்

பிடிக்க. சிகாரத்தை முதலாக உச்சரிப்பதற்குச் சில பிரமாணங்கள் வருமாறு:—

### உண்மை விளக்கம்

நம்முதலா யோதிலருள் நாடாது நாடுமருள்
சிம்முதலா யோது நீ செப்பு.

ஆதி மலமிரண்டும் ஆதியா யோதினல்
சேதியா மும்மலமுந் தீர்வாகா.

### திருவருட் பயன்

மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாகி மீளா விடின்.

சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி.

### தைத்திரீய நாராயணீயம்

சிவாய நம: சிவலிங்காய நம:

### திருநாவுக்கரசு மூர்த்திகள் தேவாரம்

திருவாய்ப் பொலியச் சிவாய நம வென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதிநீ பாதிரிப்புலியூ ரரனே.

அல்லலாக வைம்பூதங்க ளாட்டினும்
வல்ல வாறு சிவாய நம வென்று
நல்ல மேவிய நாதனடி தொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே.

### திருவாசகம்

நானேயோ தவஞ்செய்தேன் சிவாய நம வெனப்பெற்றேன்.

### திருமந்திரம்

தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
உள்ளமு தூற வொருகா லுரைத்திடும்.

சிவாய நமவெனச் சித்த மொருக்கி
அவாய மறவே யடிமைய தாக்கி.

செம்பு பொன்னுகுஞ் சிவாய நமவென்னில்
செம்பு பொன்னுகத் திரண்டது சிற்பரம்.

வாறே சிவாய நமச்சிவா யநம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை.

## பெரிய புராணம்

குருகாவூ ரமர்ந்தருளும் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் ரேழுர்திருத் தொண்டருடன்
வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பால்
பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாயநம வெனப்பேசி.

## ஔவைப் பிராட்டியார்

சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை...

மேலே காட்டிய பிரமாணங்களால் எல்லாக்கடவுளருந்தாமாக விருக்கும் சச்சிதானந்தமே சொரூபமாகவுடைய சிவபரம் பொருள் ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தில் முதற்கண் வைக்கப்பட்டது. துக்க சொரூபமான பாசத்தை நீக்கி ஆனந்த சொரூபமான சிவத்தை யடைய உரித்தாயுள்ள பசு பாசத்துக்கு மேலே சிவத்தோடு சேரவைக்கப்பட்டது. அசத்தாயுள்ள பாசம் இறுதியில் வைக்கப்பட்டது. இம்முறை **பதி, பசு, பாசம்** என்னும் பிரயோகத்தாலும் நன்கறியலாம். இம்முறை தவறி வழங்கும் **சித்து, அசித்து, ஈசுவரன்; ஜக ஜீவ பரம்** என்ற தொடர்மொழி வாக்கியங்களின் உட்கிடை நம்மவரால் ஊகித்தறியக் கிடக்கின்றது.

## ஸ்ரீ ஆனந்த நடராஜரது திருவுருவம் பஞ்சாக்ஷரத்தா லமைந்தது

சிதாகாச ரஹஸியத்தை வெளிப்படுத்தும் திருச்சிற்றம்பலமென்னும் அதீதநிலையாய உன்மனு கலைக்கண்ணே பரையின் வடிவாய் விளங்கும் ஞானகாசமாகிய சிதம்பரத்திலே ஞானமன்ருகிய சிற்சபையிலே திருவருளே திருமேனியாகச் சகளீகரித்து ஆனந்த நிருத்தனஞ் செய்யும் **மெய்ப்பொருள்** ஞானனந்த வஸ்துவாகிய சொரூப சிவமே. அதுதான் அகண்டாகாரமயம். அதுவே தன்னிலெழுந்து பொதுவில் நடனஞ் செய்தது. அப்பொருள் செய்யுந் தாண்டவ கோலத்துக்கே ஆனந்த நடராஜ மூர்த்தி

யென்று பெயர். அத்தாண்டவத்துக்கு என்றும் முடிவின்மை யால் அநவரத தாண்டவமென்று வேதம் புகலும். அம்மூர்த்தி சுத்த மாயாகாரிய ஈசுவர தத்துவ நிலையராகிய மஹேசுவரமூர்த்தி கொள்ளும் வடிவங்களுளொன்ருய நடராஜமூர்த்தியுமல்லர். குண தத்துவ நிலையராகிய ஸ்ரீ கண்டருத்ரர் கொள்ளும் வடிவங் களுளொன்ருய நடராஜமூர்த்தியுமல்லர். ஆனுல் அவ்விரு மூர்த்தி களுக்கும் அப்பாற்பட்ட சம்பு பக்ஷத்து அதிதெய்வமாகிய ஸ்ரீ நட ராஜமூர்த்தியாதலால் அவர் நிருத்தனஞ் செய்யும் ஆகாசமும் சுத்த மாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என்னும் மூன்று மாயைக் குட்பட்ட எந்த ஆகாசமுமன்று. பராசத்தி வடிவாய சிற்பரவி யோமமென்னும் சிதம்பரமாம். அதனை நம் அருண்மொழித் தேவ ராகிய ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் அடியில் வருமாறு துதித் துள்ளார் :

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிர்த்தின் மேலாம்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

### தைத்திரீயோபநிஷத்தும் ஆனந்தவல்லியில்

'ஸத்யம் ஜ்ஞான மனந்தம் ப்ரஹ்ம
யோவேத நிஹிதம் குஹாயாம் பரமேவ்யோமந்'

என்று புகன்றது.

இந்த ஆனந்த நடராஜமூர்த்தியின் சிற்கனத்திருமேனி திரு வைந்தெழுத்தாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தா லமைந்தது. ஏனைய நட ராஜமூர்த்திகளுடைய வடிவங்களோ பஞ்சப்ரஹ்ம ஷடங்கமந்தி ரங்களால் பாவிக்கப்படுகின்றவை. ஆதலால் ஓம்மஹேசுவர ருத் திர நடராஜ மூர்த்திகளுக்கும். ஸ்ரீ சிற்சபேச நடராஜமூர்த்திக்கும் பேதம் பெரிது. இவ்வுண்மை எல்லாருக்கும் விளங்குவதருமை. எல்லாச்சமய உண்மைகளையும் தன்னுள் அடக்கிக்கொண்டு தான் அவற்றினுளொன்றினுமடங்காது ஞானப் பிழம்பாயொளிரும் சிவஞானபோத உண்மை நாலின் உண்மைக் கருத்துணர்ந்த உண்மை வைதிக சைவர்களுக்கே புலனும். கடைப்பிடிக்க.

இந்நடராஜ மூர்த்தியினது திருவுருவில் நகாரம் திருவடியாக வும், மகாரம் திருவுந்தியாகவும், சிகாரம் திருத்தோளாகவும், வகாரம்

திருமுகமாகவும், **யகாரம்** திருமுடியாகவும், விளங்கும். இன்னும் தமருகம் (உடுக்கை) ஏந்திய கரம் **சிகார**மாகவும், வீசிய கரம் **வகார**மாகவும், அபயகரம் **யகார**மாகவும், அக்கினியேந்திய கரம் **நகார**மாகவும், முயலகனை மிதித்த பாதம் **மகார**மாகவும் ஒளிரும். மேலும் தமருகம் ஏந்திய திருக்கரம் சிருஷ்டியையும், அபயகரம் ஆத்மரக்ஷையையும், அக்கினியேந்திய திருக்கரம் மலஸம்ஹாரத்தையும், ஊன்றியபாதம் பிரபஞ்சத்தை மறைக்குந் திரோதானத்தையும், தூக்கிமடித்தாடும் குஞ்சிதபாதம் அநுக்கிரக முக்தியையும் தெரிக்கும். திருவடியைத் தூக்கியது மட்டும் போதாதோ, அதை மடிக்கவும் வேண்டுமோவெனின் : **தூக்கியது** - ஆன்மாவினிடத்து அருளை மேலிடச் செய்தல் ; **மடித்தது** - அருளானந்தத்தை அவ்வான்மாவினிடத்து நிலைபெறச் செய்தலாம். அன்றியும், தமருகத்தை உதறியடித்தல் மாயை யுதறுதலென்றும், அம்மாயையிற் கட்டுண்டுகிடந்த சஞ்சித கர்மங்களை எரித்தல் அக்கினியின்றொழிலென்றும், மலத்தை மேலிடாது அழுத்துதல் ஊன்றிய திருவடியின் றொழிலென்றும், ஆன்மாவினிடத்தில் அருட்பூரண மேலிடும்படி செய்து அப்பூரண நிறைவே தானாக நிற்கவைத்தல் தூக்கிய திருவடியின் றொழிலென்றும், மதுவுண்டவண்டைப்போல் ஆனந்த வாரிதியிலழுத்துவித்தல் அபயகரத்தொழிலென்றுங் காட்டும். இத்திறத்திரு நடனமே திருவம்பலத்தின் கண்ணிகழும் திருக்கூத்தின் முறைமையாம். இது முக்தர்கள் ஆனந்தத்தை யநுபவிக்கும் பொருட்டுச் செய்யும் ஐந்து தொழிலாதலின், இதனின் வேறுயுள்ளது பெத்தத்தில் கர்மத்தை யூட்டுவிக்குந்தொழில். இத்தொழிலுக்குத்தான் பெரும்பான்மையும் பஞ்சகிருத்தியத் தாண்டவமென்று பெயர். இது ஒரு காலத்து நடப்பதும் ஒரு காலத் தொழிவதுமாயிருக்கும். முன்சொன்னதோ, ஆனந்ததாண்டவமும், அநவரத தாண்டவமுமாம். அதுவே ஆதியும் முடிவுமில்லாத அற்புதத் தனிக்கூத்து. மேற்சொன்னவற்றின் உண்மைகளை அடியிற்காட்டும் பிரமாணங்களால் தெளிக.

## உண்மை விளக்கம்

ஆடும் படிகேணல் லம்பலத்தா னையனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடும்
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகரு முகம் வாமுடியப் பார்.

சேர்க்குந் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகர மபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனூர்
தங்கு மகரமது தான்.

தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய வமுக்கியருள் தானெடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பாதந் தான்.

எட்டு மிரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
சிவாய நமவென்னுந் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான்.

## ஸ்ரீ நடராஜமூர்த்தியின் ஆனந்த நடனத்தைத் தரிசித்தற்குரியா ரிவரெனல்

எவ்வித இடையூறுமில்லாத தனியிடத்திலே சுகாசனத்திருந்து பரிசுத்தனாகிக் கழுத்து, தலை, சரீரம் ஆகியவிவற்றைச் சமமாக நிறுத்தி, அன்பினோடு தனது குருவை வணங்கி, இந்திரியங்களை யடக்கி, முக்குணவசத்திற்படாது, பிராணாயாமத்தினாலே இடைகலைபிங்கலைகளை யடைத்துப் பிராணனைக் கும்பித்துச் சுழுமுனை நாடியிலே பிரவேசிக்கும்படி செய்து, ஆறாதாரங்களையுங்கடந்து அப்பாற்சென்று, ப்ரஹ்மரந்தரத்தின் மேலுள்ள சமனாகலையையுந் தாண்டி உன்மனாகலையின் கண்ணுள்ள எமது அப்பனாகிய ஸ்ரீ நடராஜமூர்த்தியைத் தாண்டவச் சிலம்பொலியோடு தரிசித்துச் சென்று, அவரருளினாலே ஆயிரவிதழுள்ள கமலமெனப்படும் பராசத்தி நிலயத்தில் சுத்தவறிவாயிலங்கும் பரம்பொருளை ஸோகம் பாவனையினாலே அதுவே தானாகநின்று, அத்வைதானந்தம் நுகர வல்லாரெவரோ, அவரே அந்த ஆனந்தத்தாண்டவத்தைத் தரிசிக்க வல்லவர். அம்மஹான்களே பூமியிலேயே பேரின்பத்தை யநுப

ஷித்தவர்கள். அவர்கள் பிண்டத்தில் தாண்டவ தரிசனஞ் செய்த வண்ணமே அண்டத்திலுஞ் சிற்சபையையடைந்து ஆனந்தத் தாண்டவ தரிசனஞ் செய்தற்குரியவராகின்றனர். ஏனையோர்க்கு அது கிட்டுவதருமை. ஆயினும் பரங்கருணைத் தடங்கடலாகிய எமதையன், என்போல்வார்களு முய்யவேண்டிய நிமித்தம், இவ்வுலகினும் அந்நிலையையமைத்துப் பதஞ்சலி வியாக்கிரபாதர் பொருட்டாக ஆனந்த நிருத்தனஞ் செய்தருளினர். அந்நிலையமைந்த விடமே இப்போதுள்ள **சிதம்பரஸ்தல சிற்சபையாம்.** இந்திரிய நிக்கிரஹஞ்செய்து, முக்குண விருத்தியுட்படாது, ஸோஹம் பாவனைசெய்து ஆனந்த நடனங்காண முடியாதார்க்கு இந்திரிய வழியே சென்று ஊனக்கண்கொண்டுந் தரிசித்து ஆனந்திக்குமாறு ஸ்ரீ நடராஜமூர்த்தி யநுக்கிரகஞ்செய்துள்ளார். வாக்கு மனதுக்கு மெட்டாத அச்**சிற்சபா நடனம்** வாக்கு மனதுக்குமெட்டும்படி அவர் செய்தது அவரது பெருங்கருணைப் பெருக்கே. அவர் அவ்வாறு செய்தமையால் அவருடைய சொரூப லக்ஷணத்துக்கு ஏதும் குறைவின்று.

### திருவாசகம்

“ இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா வானந்த மணிகொடில்லை கண்டேனே ”

என்றற் றொடக்கத்தனவான எலும்புருக்கிப் பாசுரங்கள் கற்போன்ற என்மனத்தையுங் கசிந்துருகச் செய்யுமாயின், உள்ளன்புடைய உண்மைச் சைவர்களை எவ்விதமாக்குமோ அறியேன்! அன்பு நீர் நிறைந்த பெரிய பள்ளப்பெருக்கில் கீழ்மேலாகப் பதைத்துருகி நிற்கச் செய்யுமன்றோ !! “ ஆனந்தக்கூத்தன் அருள் பெறினு மவ்வணமே, ஆனந்த மாகிநின்றாடோமோ தோணோக்கம்” என்பதநுபவம். ஆனந்த நடேசனைக்காணாத கண்களுங் கண்களோ ! தரிசிக்காத ஜன்மமும் ஜன்மமோ !! அன்புடையீர் ! தில்லைக்கு விரைந்து செல்மின்கள் ; ஸ்ரீ சிற்சபேசனைத் தரிசியுங்கள் !! பயின்ற பாவத்தைப் போக்கிக் கொள்ளுங்கள் !!! உளங் கசிந்துருகுங்கள்.

அல்லாமலும், ஞானானந்த வஸ்துவாகிய சொரூபசிவம் சம்பு பக்ஷத்து அதிதெய்வமாய்ச் சகளீகரித்து ஸ்ரீ நடராஜ சிற்கன

கோலத்தோடு தென்முகநோக்கி மன்றில் நிற்ப, பிரமன் முதலிய பஞ்சகர்த்தாக்களும் அவரது சக்தியாலதிஷ்டிக்கப்பட்டு அவரது சந்நிதானத்தில் ஐந்து தொழில்களைச்செய்வர். அந்தக்கர்த்தாக்கள் செய்யும் பஞ்சகிருத்தியங்கள் பெத்தான்மாக்களை நோக்கியதும், சிற்சபேசனாகிய எமதப்பன் செய்யும் ஐந்தொழில்நடனம் முக்தான்மாக்களை நோக்கியதுமாயுள்ளது. ஆகையினாலே, ஸ்ரீ ஆனந்தநடராஜமூர்த்தியின் திருமேனி வேதஹ்ருதயத்தில் பிரகாசிக்கும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தால் அமைந்ததென்றோர்க. அதுபற்றியே சிற்சபையும் நடராஜமூர்த்தியும் நாயகத்தானம்பெற, ஏனைய ஆலயங்களும் அவற்றிலுள்ள மூர்த்தங்களும் பரிவாரத்தில் அமரும் விதமாய்ச் சிதம்பரவாலயம் அமைக்கப்பட்டுள்ளது. **சிற்சபை** பரமுத்திஸ்தானம். **கனகசபை** அபரமுத்திஸ்தானம். **ஏனைய சபைகள்** பதமுத்தி பந்தமுத்தி ஸ்தானங்கள். மூவகை ஆன்மாக்களும் ஸ்ரீ நடராஜவள்ளலது ஆனந்தத் தாண்டவத்தைத்தரிசிக்க அசக்தரென்று விளக்கவே **சிற்சபை** துவஜஸ்தம்ப பலிபீடங்களோடு நந்திதேவரில்லாமல் விளங்குகின்றது. அதிகாரமுத்தர் அபரமுத்தர் அந்நடனத்தைப் புறம்பிலிருந்து காண்டற்குரியவர்களென்று தெரிவிக்கவே சிற்சபையின் வேறாயுள்ள **கனகசபையில்** அதிகாரநந்தி அமைக்கப்பட்டுள்ளது. ஏனைய ஆலயங்களிலோ மூன்றும் ஒருங்கு அமைக்கப்பட்டுள்ளது பிரத்தியட்சம். இதனாலே முக்தான்மாக்களுக்கேயுரியது அந்த **ஆனந்த நடனம்**. அக்கோலம் ஸ்ரீ பஞ்சாக்ஷரமே யாதலின்,

> " வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
> றஞ்ச வுதைத்தன **அஞ்செழுத் துமே** " என்றார்

அம்பிகையி னருட்பாலை யுண்டருளி, ஞான மழை பொழிந்த சைவசிகாமணியாகிய நம் ஞானசம்பந்தப் பெருமானார். அவரே புரமெரித்தார் திருமகனார்.

சிதம்பராலயத்தில் **பிரமதேவர்** சண்டேச்வர ஸ்தானத்திலும், கோவிந்தராஜராகிய **விஷ்ணுமூர்த்தி** கனக சபைக்குப் புறம்பிலும், **உருத்திரமூர்த்தி** காலவைரவர் வடிவத்திலும், **மஹேசுவரமூர்த்தி** நிருத்தசபையிலும், **சதாசிவமூர்த்தி** திருமூல ஸ்தானத்திலும் விளங்கியிருத்தல் பிரத்தியட்சம். ஏனைய ஆலயங்களில் இவ்விதவமைப்பின்று. **அருட்பராசக்தியே சிவகாமியம்மை** யென்றோர்க.

## ஸ்ரீ சிதம்பரம் தரிசிக்க முக்தியாம்

அல்லதூஉம், எல்லாக் கடவுளருந் தாமாகவிருக்கும் ஸ்ரீ ஆனந்தத்தாண்டவேச்வரப் பெருமான் தம்மையுபாசிக்கும் ஆன்மகோடிகளைப் பந்தத்தினின்றும் நீக்கி முக்திகொடுத்துப் பரமானந்தமளிக்குஞ் செய்கை இரதகுளிகையின் செயல் போன்றதாம். இரதகுளிகை ஸ்பரிசவேதி தரிசவேதி எனவிரு வகைப்படும். செம்பினையுருக்கி அதில் இரதகுளிகையைவிட அக்குளிகை செம்போடு கலந்து ஸ்பரிசித்து வேதிப்பதுவே ஸ்பரிச வேதியாம். அப்படிக்கின்றி உருக்கிய செம்பின்முன்னே காட்டப்பட்ட தரிசனமாத்திரத்தில் வேதித்துவிடுவது தரிசவேதியாம். இவ்விருவகையுள் சிதம்பராலயத்திலமைந்த முக்திப்பேற்றினியல்பு தரிசவேதியின் செயல்போன்றதாம். அதுபற்றியே சிதம்பராலயம் தரிசிக்க முத்திதருமெனச் சாஸ்திரங்கள் பகராநின்றன.

### திருநாவுக்கரையரும்

"பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம்
பிறவாநாளே"

என்று உபதேசித்தருளினர்.

இத்துணை மஹிமைக்குங்காரணம் ஸ்ரீ பஞ்சாக்ஷரமேயாம். இன்னும் விரிப்பிற்பெருகுமாதலின் இம்மட்டில் திறுத்தினும்.

### காரண பஞ்சாக்ஷர விளக்கம்

**சிவாயசிவ** என்னுங் காரண பஞ்சாக்ஷரம் - நகார மகாரங்களாகிய இரண்டக்ஷரங்களுமின்றி ஏனைய மூன்று அக்ஷரங்களுள் **யகாரம்** நடுவிலிருக்க மற்றைய **சிகார வகார**ங்களாகிய இரண்டக்ஷரங்களும் முன்னும் பின்னுமாய் நிற்க ஐந்தெழுத்தாகிச் சிகாரத்தை முதலாக வைத்து உள்ளத்துன்னுவது. இதற்கே இருதலை மாணிக்கமென்றும், இருதலைக் கொள்ளியென்றும், அதிஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரமென்றும் பெயர். இது சாமானியருக்கு உபதேசிக்கத் தக்கதன்று. அதிதீவிர பக்குவிக்கே உபதேசவாயிலா யுணர்த்தற்பாலது. இதுவும் முக்தி பஞ்சாக்ஷரமே.

### திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

விண்ணினார்பணிந் தேத்த வியப்புறு
மண்ணினார்மற வாது **சிவாய**வென்

றெண்ணி னார்க்கிட மாவெழின் வானகம்
பண்ணி னரவர் பாலைத் துறையரே.

### திருமந்திரம்

**சிவாய சிவ**சிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க வானந்த மாமே.
ஆனந்த மூன்று மறிவிரண் டொன்றாகும்
ஆனந்த **சிவாய** வறிவார் பலரில்லை.

ஆரு றகன்று நமவிட் டறிவாகி
வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈறார் பரையி னிருளற்ற தற்பரன்
பேறார் **சிவாய** வடங்கும்பின் முத்தியே.

### மஹாகாரண பஞ்சாக்ஷர விளக்கம்

**சிவ** என்னும் மஹாகாரண பஞ்சாக்ஷரம் - மேற்சொன்ன காரண பஞ்சாக்ஷரமாகிய சிகார வகார யகாரங்களுள்ளே **யகார மாகிய ஆன்மா** மும்மலங்களினின்றும் நீங்கிப் பரையின் வியாபகத் திற் றலைப்பட்டு, அதனொடு அநந்நியமாய் வகார சிகாரங்களின் இடையே நின்று, அக்ஷரம் உன்னுதலையும்விட்டு, அப்பரையின் சொரூபமே எங்குமாய்க் காணப்பெற்றுச் சிவமும் அருளுமாய் நிற்றலாம். இது தமிழ் மறையில் **வாசி**யென முதல் நீண்டும், ஆரிய வேதத்தில் **வஸி**யென இறுதி நீண்டும் விளங்குவதாம். பின்னர், வர்ன வ்யத்தியயத்தினால், அதாவது எழுத்துக்கள் மாறு தலினால், **சிவ** என விளக்கமுற்றுச் சிவ :, சிவை, சிவம் என முப்பாற் பொருளும்பெற்று அதீதப் பொருளாய், பரப்ரஹ்ம சொரூபமாய் வேதசிரசில் மிளிரும். இதுவும் முத்தி பஞ்சாக்ஷரமே. இதன் மஹிமையும் மிக்க ரஹஸியமாதலின் குருமுகத்தாலறிந்து கொள்க.

### திருமந்திரம்

எழுத்தறி வோமென் றுரைப்பர்க ளேதர்
* எழுத்தை யழுத்தும் எழுத்தறி யாரே.

### திருவருட்பயன்

**வாசி** யருளி யவ்வை வாழ்விக்கு மற்றதுவே
ஆசி லுருவமுமா மங்கு.

---

* தலையெழுத்தை.

ஆசினவா நாப்பண் அடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு.

## மஹாமநு விளக்கம்

சி என்னும் மஹாமநுவாகிய முக்தி பஞ்சாக்ஷரம் - மஹா காரண பஞ்சாக்ஷரத்திலுள்ள சிகார வகாரங்க ளிரண்டினுள் வகாரமாகிய அருளில் நிறைந்து நின்ற ஆன்மாவை அருளொடுந் தன்னுள் லயப்படுத்திக்கொண்டு கரைகடந்த பேரானந்தப் பெரு வெள்ளத்தி லழுத்தி ஏகசொரூபமாய் நிற்கும். அப்பொழுது ஆன்மா நீ நான் என்றிரண்டின்றி அறிவுருவாய் எங்கும் நிறைந்து நிற்பதுவே இம்மநுவின் மஹாரஹஸியம். இதுவே எல்லாரும் ஈடேறும் பொருட்டும், குணங்குறி யற்று இன்ப நிட்டை கூடுதற்கும் எம்மான் கைகாட்டிய கருத்து. பரிபூரண நிலையும் இதுவேயாம். இது சிவ ஞானிகளாலேயே அநுபவ வாயிலாயுணரப்படுவது. " அறிவு வடி வென் றறிந்திருந்தேனே " என்றார் திருமூலர். இம்மஹா மநுவுக்கே இறையெழுத்தெனவும், பெருவெழுத்தெனவும், பேசாவெழுத் தெனவும், ப்ரஹ்ம பீஜமெனவும் பெயர். இந்தச் சி என்னும் எழுத்தில் ச் (சகார மெய்) - வரிவடிவு ; அ - பிரணவாக்ஷர மூலம் ; இ - அவ்வக்ஷர மூலத்தை விளக்கும் அருட்பூரணம் ; இம்மூன்றின் தோற்றமும் அசைவும் - விந்து ; இதன் புடைபெயர்ச்சியாகிய ஒலியே - நாதம். இவ்வைந்தும் ஒன்றுயமைந்ததே சி. இதன் விளக்கம் மெய்ஞ்ஞானிகளுக்கே புலப்படுவதாம்.

## திருவாசகம்

சிவனென யானுந் தேறினன் காண்க.

நாமொழிந்து,
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

## திருமந்திரம்

சீவ னெனச்சிவ னென்னவே றில்லை
சீவ னார்சிவ னாரைய றிகிலர்
சீவ னார்சிவ னாரைய றிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டி ருப்பரே.

நானென்றுந் தானென்றும் நாடினேன் நாடலும்
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பதும்

நானென்ற ஞானம் முதல்வனே நல்கினன்
நானென்று நானும் நினைப்பொ ழிந்தேனே.
நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதம்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாம்
தானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே.
நானென நீயென வேறில்லை.
நானென் றவனென்கை நல்லதொன் றன்றே.

## திருக்களிற்றுப்படியார்

சிவமே சிவமாக யானினைந்தாற் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச்—சிவமென்
றுணர்வாரு மங்கே யுணர்வழியச் சென்று
புணர்வாரு முண்டோ புவி.

அதுவிது வென்றும் அவன்நானே யென்றும்
அதுநீயே யாகின்ற யென்றும்—அதுவானேன்
என்றுந் தமையுணர்ந்தா ரெல்லாம் இரண்டாக
ஒன்றாகச் சொல்வாரோ வுற்று.

## தாயுமான சுவாமிகள் பாடல்

நீயென நானென வேறில்லை யென்னும் நினைவருளத்
தாயென மோன குருவாகி வந்து.
யான்றான் எனலறலே இன்பநிட்டை யென்றருணைக்
கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ.
எங்குஞ் சிவமே இரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே.
நீயற்ற வந்நிலையே நிட்டை. [சும்மா,
நானெனவும் நீயெனவும் இருதன்மை நாடாமல் நடுவே
தானமரும் நிலையிதுவே சத்தியம் சத்தியம்.
என்னையுந் தன்னையும் வேறா— உள்ளத்,
தெண்ணாத வண்ணம் இரண்டற நிற்க.
உனக், கானந்தம் வேண்டின் அறிவாகிச் சற்றே
நின்றாற் றெரியு மெனவே.

தானான தன்மயமே யல்லாலொன்றைத் தலையெடுக்க வொட்டாது.

அதுவெனலும் அறவேவிட்டு, **மதுவுண்ட வண்டெனவுஞ்** சநகனாதி மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும், பதியிந்த நிலை.

ஆராலு மறியாத சத்தன்றே **அதுவாய்,**
அங்கிருநீ யெங்கிருந்தும் **அதுவாவை** கண்டாய்.

**கந்தரநுபூதி**

யானாகிய வென்னை விழுங்கி வெறுந்
தானா கிநின் றதுதற் பரமே.

இன்னும் அனேக பிரமாணங்கள் உள். விரிவஞ்சி விடுத்தாம். இதுவரையிலுங் கூறிப்போந்த ஐவகைப் பஞ்சாக்ஷரங்களுள் வைதிக சைவர்களாகிய நாம் நியமமாக உச்சரிக்கவேண்டிய மந்திரங்கள் இரண்டே. **அவை ஸ்தூலமும், ஸூக்ஷ்மமுமாம்.**

**மந்திரங்களின் மஹத்வ விளக்கம்**

மேற்சொன்ன நியமங்களை விட்டுச் சிலர் செய்யவேண்டியது இது, தவிர்க்கவேண்டியது இது என்றுணராமலும், **மந்திரப் பொருத்தம்** ஆவசியகமென்பதை யறியாமலும், பலரிடத்திலும் பலவாறு உபதேசிக்கப்பெற்றும், சாஸ்திரங்களில் எழுதி வைத்திருக்கும் மந்திரங்களைக் குருமுகத்தாற் பெறாமல் தாமே யுச்சரித்தும், நிஷ்பலமடைந்து அனேக தீமைகளுக்காளாகி நிர்ப்பாக்கிய நிலையடைகின்றார்கள். அப்படிச் செய்வது பெருங் குற்றமென்று கண்டெடுத்துக்காட்டினும். **சித்தர்களோ** தங்களுக்குப் பொருத்தங் குறைவாயுள்ள மந்திரங்களையுங்கூடத் தங்களுக்குப் பொருந்துமாறு அக்ஷரங்களை மந்திரார்த்த நியாயங்கொண்டு முன்பின்னாக மாற்றிக்கணித்து, வேண்டிய சித்திகளைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள். அப்படிச் செய்யவோ நம்மவர்களுக்குச் சாத்தியமின்று. ஆதலால் **ஓசை தருமைந்தெழுத்தையே** குருமுகமாயறிந்து விதிப்படி யுள்ளத்துன்ன, எல்லாப் பலன்களும் சித்தியாகும். மந்திரத்தால் யானை முதலிய மிருகங்களும் சர்ப்ப முதலிய விஷ ஜந்துக்களும் கட்டுப்படுதல் பலருமறிந்த விஷயம். ஒருவர் ஒரு தேவதையையோ அல்லது ஓர் மஹானையோ தியானித்த மாத்திரத்தில் அந்தத் தேவதை அல்லது அந்த மஹான் அவருக்கெதிர்ப்பட்டதாகவும், ஓர் அஸ்திரத்தைச் சங்கற்பித்த மாத்திரத்தில் அவ்வஸ்திரம் அவரிடம் வந்ததாகவும் புராணேதிகாசங்களிற் கூறப்பட்டிருத்தல்

பிரசித்தம். இதனல் மந்திரத்தா லாகாத காரியம் ஒன்றுமின்றென்று தெரியவருகின்றது. ஆயினும், மந்திரங்களை எப்பொழுதும் குருமுகத்தாற் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றே ஈண்டு நாம் வற்புறுத்துகிறோம். பீஜாக்ஷரங்களை மந்திரங்களோடு சேர்த்துக் கிரம்மாய் ஜபிக்கின், வேண்டிய இஷ்ட சித்திகள் கிடைப்பதாயினும், மந்திர தேவதைகளுக்கு விருப்பமில்லாத காரியங்களைச் செய்யின் அத்தேவதைகள் உடனே அவனுக்கு அனேக தீங்குகளைச் செய்து அவனை நிர்ப்பாக்கியனுக்கிவிடும். ஆதலால் மந்திரங்களைத் தம்மிஷ்டப்படி ஜபித்தல் கூடாது. மனமும் நிர்மலமாயிருத்தல் வேண்டும். பரோபகார சிந்தையும் மிக்க ஆவசியகம். சிவபெருகானுக்குச் செய்யும் பலவித ஆராதனைகளுள் **பரோபகாரமும், நமஸ்காரமுமே** சிறந்த ஆராதனங்களாம். இப் பரோபகாரத்தைக் கைவிட்டால் மந்திரங்கள் சிறந்த பலனைத்தரா.

### திருக்குறள்

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

### தொல்காப்பியம்

நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப

எனவும் போந்த ஆணைகளைக் கூர்ந்து யோசித்து மந்திரங்களின் ஆற்றலைத் தெரிந்துகொள்க. சாதாரணமாய் வீட்டு வாசற்படியின் றலைப்பில் " **உள்ளே வரக்கூடாது** " என்று எழுதி வைத்திருந்தால் அவ்வாக்கியத்தைக் கண்டமாத்திரத்தில் உள்ளே செல்ல அஞ்சி வெளியில் நின்றுவிடுவது யாவருமறிந்த விஷயம். சாதாரணமான எழுத்துக்களுக்கே இத்தகையவல்லமை யிருக்குமாயின் சிவ சக்தி தோய்ந்த மந்திரங்களின் ஆற்றலைக் கூறவும் வேண்டுமோ! மந்திரங்கள் யாவும் ஜடமாயிருந்தாலும் ஆன்மாக்களின் நன்மையைக் கருதியே பிரதம சிருஷ்டியில் அவையாவும் நாதரூபமாய் உண்டாக்கப்பட்டன. ஆனமையின், அக்ஷர ஸமூகமாகிய மந்திரங்களை அக்ஷர ஸ்வரூபிணியாகிய அருட்சத்தி தோய்ந்து நின்று ஆன்மாக்களைக் காக்கின்றது. அது எதுபோலுமெனின், அக்கினியை யுற்பத்தி செய்யும் அரணியென்னுங் கட்டைமீது, உத்தராரணியென்னும் ஊன்றிக் கடையுங் கட்

டையை வைத்து இடைவிடாது கடையின் அவ்விரண்டினுள்ளும் மறைந்து நிற்கும் அக்கினி வெளிப்படுவதுபோல ஆன்மாவை * அரணியாகவும், மந்திரத்தை † உத்தராரணியாகவும் வைத்துத் **தியானம்** என்ற கடைதலே இடையருது செய்யின் அம்மந்திரத்துக்குரிய தேவதை வெளிப்பட்டு ஆன்மாவைக் காப்பதோடு அவன் விரும்பிய பலன்களையெல்லாந் தரும். ஆதலால் மந்திரத்தைச் சாதாரணமான சொல்லென்று கருதவேண்டாம். இன்னுங் கூற வேண்டிய விஷயங்கள் அனேகமுள. விரிவஞ்சி விடுத்தாம்.

## ஸோஹம் பாவனை விளக்கம்

இந்நூலின் உக-ஆம் பக்கத்தில் **ஸோஹம்** பாவனை கூறப்பட்டுள்ளது. ஸோஹம் என்னும் மொழி, ஸ: + **அஹம்** என்னும் இரண்டு சொற்களா லாக்கப்பட்ட ஒரு தொடர்மொழி. இதில் பிரணவம் பின்னிக் கிடக்கின்றது. இதன்பொருள் **அவன் நான்** என்பதே. அதாவது, ப்ரஹ்மம் நான் என்பதாம். **ப்ரஹ்மம் நான்** என்ருலும், **நான் ப்ரஹ்மம்** என்ருலும் இரண்டுமொன்றேயென்று அசுர வேதாந்தங் கற்ருேர் கூறுவர். அது பொருத்தமின்றென்பதைச் சிவஞானிகள் வாக்குகளாற் றெளிவிப்பாம்.

### திருவாசகம்

நவமாய செஞ்சுடர் நல்குதலும் **நாமொழிந்து**
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

### திருமந்திரம்

**நானு** மழிந்தமை நானறி யேனே.
**நாமய** மற்றது நாமறி யோமே.

### திருவுந்தியார்

**நாமற்ற** பின்னதன், தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தா னென்றுந்தீபற.

### நெஞ்சுவிடு தூது

தாம்பிரமங் கண்டவர்போல் தம்மைக்கண் டாங்கதுவே
**நாம்பிரம** மென்பவர்பால் நண்ணதே.

---

* அரணி - தீக்கடை கட்டை † உத்தராரணி = தீக்கடைகோல்.

### தாயுமான சுவாமிகள்

நாம்பிரம மென்றால் நடுவேயொன் றுண்டாமால்
தேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநா ளெந்நாளோ.
நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்கும்
தானென வுண்மைதனைச் சாருநா ளெந்நாளோ.
ஊனென்றி நாதன் உணர்த்துமதை விட்டறிவேன்
நானென்ற பாவிதலை காணுநா ளெந்நாளோ.
சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே
அல்லும் பகலு மரற்றுவதென்—நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்கள் நாமில்லை யென்பரந்தோ
மோனமய மான முறை.
நான்று னெனுமயக்கம் நண்ணுங்கா லென்னுணை
வான்று னெனநிறைய மாட்டாய்நீ.
நானென நிற்குஞானம் ஞானமன் றந்தஞானம்
மோனமா யிருக்க வொட்டா.
யாங்களே கடவுளென் றிடும் பாதகத்தவரும்
நட்டநடு வேயிருந்த நாமென்பர் சிலர்.
ஞானத் தெய்வத்தை நாடுவன் நானெனும்
ஈனப் பாழ்கெட வென்று மிருப்பனே.
நின்னிறைவே தாரகமாய் நின்றுசுக மெய்தாமல்
என்னிறைவே பாவித்தேன் என்னே பராபரமே.

### ஸூதஸம்ஹிதை

கரியவனும் யாம்பரமென் றெண்ணியதற்
 களவில்பிழை கலந்த தென்றால்
உரியபிறப் பிறப்பொழியாச் சீவர்சிலர்
 யாம்பர மென் றுரைப்ப ரந்தோ.

### இராமலிங்க சுவாமிகள்

நாமே பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கிவழிந்தாங்கே
பிதற்றுகின்ற பெரியவர்தம் பெரியமதம் பிடியேல்.

மேலே உதஹரித்த பிரமாணங்களின்படி நான் பிரமம் என்பது நவை வழியென்றும், பிரமம் நான் என்பது நல்வழி யென்றும் பெறப்படுகின்றதன்றோ.

### தாயுமான சுவாமிகள்

" உன்னைநானென்று பாவிக்கின் அத்து
விதமார்க்க முறலாம் " என்றனர்.

" **அஹம் ப்ரஹ்மம்** " என்பதில் நான் என்னும் முனைப்பு முற்பட்டு நிற்றலால் அந்தை முன்பின் மாற்றி " **ஸோஹம்** " என உச்சரிக்கும்படி வைதிக சைவம் பகர்கின்றது. அம்மந்திரத்தி லுள்ள இரண்டு மெய்களை நீக்கிவிட்டால் எஞ்சுவது ஒப்பற்ற பிரணவமே. அப்பிரணவமே முமுக்ஷுக்களுடைய பூஜ்யவாசக மாயும் விசேஷ மந்திரமாயுமுள்ளது. அம்மந்திரத்தின் ரஹஸியோ பாஸனத்தை எவனொருவன் சத்குரு கடாக்ஷத்தாலறிந்து அப்பிய சித்துச் சித்திபெறுவானோ அவனே பரம யோகியாவன். அவனே பிரம நிஷ்டர்களுக்குள் முக்கியமானவன். அவனுக்கே ஈசுவர சம்பந்தமான எல்லா ஐசுவர்யத்தன்மையுமுண்டு. அம்மஹானே,—

### பகவத்கீதை

ஸர்வம் ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ :

(இ - ள்) 'எல்லாவற்றையு மடைவாய், எல்லாமுமாவாய்' என்று ஸ்ரீ கண்ணபிரான் உபதேசித்தருளியபடி பிரபஞ்ச பேத மெல்லாம் இன்பாகாரமாக தோன்ற நான் நீ என்னும் வேற்றுமை யின்றி ஸர்வ சொரூபனாய்த் தானே தானாய், **அறிவாகாரமாய்** விளங் குவன். இவற்றை விரிப்பிற் பெருகு மென்றெண்ணி இவ்வளவிற் சுருக்கிப் பூர்த்தி செய்கின்றோம்.

அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே யிறையே பராபரமே.

---

# திருமுறைத் திரட்டு

---

## சம்பந்தர் திருமுறை

### பொது. நமச்சிவாயத் திருப்பதிகம்

பண்—கௌசிகம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே. (1)

நம்பு வாரவர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்ப னாம நமச்சி வாயவே.

(உ - ரை) வம்பு - மணம். நாண்மலர் - புதுப்பூ. தனித்த இனிமையும், தெளிவும், எச்சிற் படாமையும், மணமும் உடைய தாதலின் நாண் மலர் வார்மது ஒப்பது எனப் பெற்றது. (2)

நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினை
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்க னாம நமச்சி வாயவே

(உ - ரை) அக்குமாலை - உருத்திராக்கமாலை. எண்ணுவார் - மானத ஜபம் செய்பவர். (3)

இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயன னாம நமச்சி வாயவே.

(உ - ரை) நியமம் - நாள்விடாது கிரமமாகச் செய்தல். நயனன் - கண்களையுடையவன். யமன் தூதுவர் அஞ்சுவரென்பதை

" மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரம் " என்னும் அப்பர் ஆணைப் பாடலால்அறிக. (4)

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்பு வராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே. (5)

மந்த ரம்மன பாவங்கண் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாம நமச்சி வாயவே.

(கு - ரை) மந்தரம் - மந்தரமலை. பந்தனையவர் - கன்ம பந்தம் உடையார். நந்தி - சிவபெருமான். (6)

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயினு ருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரத னும நமச்சி வாயவே.

(கு - ரை) ஏழ்நரகம் - அள்ளல், இரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி என்பன. உருத்திரர் - சிவகணங்கள். விரவி - கலந்து. (7)

இலங்கை மன்ன னெடுத்த வடுக்கன்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை
நலங் கொளுமை நமச்சி வாயவே.

(கு - ரை) அடுக்கல் - கைலைமலை. மலங்கி - கலங்கி. வாய் மொழி செய்தவன் - வாய் விட்டு அரற்றினவன் ; இராவணன். (8)

போதன் போதன கண்ண னு மண்ண றன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி யலந்தவர்
ஓது நாம நமச்சி வாயவே.

(கு - ரை) போதன் - பிரமன். போதனகண்ணன் - தாமரைக் கண்ணனாகிய திருமால். எதிர் நிரனிறை. நேடிய - தேடிய. காண்பு - தொழிற் பெயர். அலந்தவர் - வருந்தியவர். (9)

கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொன் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட வமுதுசெய்
நஞ்சுண் கண்ட னமச்சி வாயவே.

(கு - ரை) மண்டை - வாயகன்ற பாத்திரம். மண்டையர் - பௌத்தர். கையர் - கீழ்மக்கள். மிண்டர் - முரடர். விஞ்சை - வித்தை. அண்டர் - தேவர். (10)

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே.

(கு - ரை) சந்தை - சந்தம். பந்தபாசம் - கட்டும் வினைக் கயிறு; அல்லது ஆன்மாவை யநாதியே பந்தித்து நிற்கும் மூல மலமும், இறுகப் பிணித்து நிற்கும் மாயையும். (11)

## பொது. பஞ்சாக்கரத் திருப்பதிகம்

பண்—காந்தார பஞ்சமம்

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன வஞ்செ ழுத்துமே.

(கு - ரை) ஐந்தெழுத்தை மனங்கசிந்து நினைக்க வேண்டும் என்பதாம். கூற்று - யமன். துஞ்சலும்...போழ்தினும் என்றது ஜாக்கிரம் சொப்பன முதலிய ஐந்துஅவத்தைகளினும் என்பதாம். (1)

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையு ணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திர மஞ்செ ழுத்துமே.

(கு - ரை) நின்று, அவர் தம்மை எனப்பிரிக்க. செம்மை வேதியர் - சிவதீட்சை பெற்ற அந்தணர். வேதம் மந்திரம், பிராம ணம் என இருவகைப்படும். மந்திரம் என்பது வேள்விக்குரிய பொருள், தேவதை முதலாகிய வேள்வியின் வடிவத்தை யுணர்த்து வது. மந்திர நான்மறை - மந்திரம் என்ற பகுப்பினையுடைய

வேதம். அந்தியுள் மந்திரம் - இரு அந்திக்காலத்தும் எண்ணும் மந்திரம். செந்தழல் - வைதிகாக்கினி. (2)

ஊனிலு யிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞானவி ளக்கினை யேற்றி நன்புலத்
தேனைவ ழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆனகெ டுப்பன வஞ்செ ழுத்துமே.

(கு - ரை) ஊன் - உடம்பு; ஆகுபெயர். உயிர்ப்பு - பிராண வாயு. ஒண்சுடர் ஞானவிளக்கு - சிவனது அருட்சத்தி காட்டும் சிவஞான தீபம். ஏனை வழி - இடைகலையும் பிங்கலையும் அல்லாத சுழுமுனை. (3)

நல்லவர் தீய ரெனாது நச்சினர்
செல்லல்கெ டச்சிவ முத்தி காட்டுவ
கொல்லந மன்றமர் கொண்டு போமிடத்
தல்லல்கெ டுப்பன வஞ்செ ழுத்துமே.

(கு - ரை) செல்லல் - துன்பம். (4)

கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமு மஞ்ச வைம்பொழில்
தங்கர வின்பட மஞ்சுந் தம்முடை
அங்கையி லைவிர லஞ்செ ழுத்துமே.

(கு - ரை) திருவைந்தெழுத்து மதனன்பாணம், பூதம், உடல், சேடன்படம் இறைவன் திருக்கைவிரல் ஆகிய ஐந்தான பொருள்கள் ஐந்தாக விளங்குகின்றது என்பதாம். கொங்கு - தேன்; மணமுமாம். வன்மதன் - முற்றத் துறந்தாரையும் அற்றநோக்கி அல்லற்படுத்தும் வன்மையுடைய மதனன். மதன் வாளியானது உலக விருத்தி செய்தலின். பூதம் - அகப்பூதம். பொழில் - உலகு; ஆகுபெயராக உடலை யுணர்த்திற்று. உடல் ஐந்து - தூலம், சூக்குமம் காரணம், கஞ்சுகம், குணம் என்பன. இப்பாடல் "அஞ்சு கொலாம்" என்ற அப்பர் வாக்கை நினைவூட்டும். .. (5)

தும்ம லிரும லெடுத்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை யஞ்செ ழுத்துமே.

(கு - ரை) தும்மல் இருமல் - ஆதி பௌதிகத் துன்பங்கள். வெம்மை நரகம் - ஆதி தைவிகத்துன்பம்; "யாவரும் விழையா கோள்வாய் நிரயத்து, வீழ்ந்தன ரெழாஅ வான்கழி துன்பம்" (ஞானுமிர்தம்.) அடர்த்து - செறிந்து. வினை - பிராரத்தம். அம்மை - மறுமை. (6)

வீடுபி றப்பை யறுத்து மெச்சினர்
பீடைகெ டுப்பன பின்னை நாடொறும்
மாடுகொ டுப்பன மன்னு மாநடம்
ஆடியு கப்பன வஞ்செ ழுத்துமே.

(கு - ரை) பிறப்பை யறுத்து வீடு மெச்சினர் எனக்கூட்டுக. மாடு - பொன். அஞ்செழுத்து ஆனந்தக் கூத்தன் திருவுருவாகலின், நடம் ஆடியுகப்பன என்றருளினார்கள். வீடு பிறப்பு - சாதல் பிறத்தல் என்றுமாம். (7)

வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டைபி ராவணன் பாடி யுய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்டம ளிப்பன வஞ்செ ழுத்துமே.

(கு - ரை) ஓதி - கூந்தல். மடந்தை - உமாதேவியார். இறைவன் உமாதேவியார்க்குப் பஞ்சாச்சரம் உபதேசித்தமை, "அணிகொண்ட கோதையவ ணன்று மேத்த வருள் செய்த வெந்தை" (தென்முல்லை) என்பதால் விளங்கும். பாடி - இசையமைத்துப் பாடி; ஆனயர்போல். (8)

கார்வண னான்முகன் காணு தற்கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாடொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வண மாவன வஞ்செ ழுத்துமே.

(கு - ரை) பேர் - புகழ். வணம் - தன்மை. பித்தர் - சிவஞானிகள். ஆர்வணம் ஆவன - நுகருந்தன்மையாவன. (9)

புத்தர்ச மண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்க டெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன வஞ்செ ழுத்துமே.

(கு - ரை) புத்தர் : புத்தி தத்துவம் வரையில் துணிந்தவர்கள். கழுக்கையர் - கழுவைக் கையில் ஏந்தியவர்கள். சமணர்கள் தம் சமய நிலைக்குத் தவறு வந்துழி அழித்துக் கொள்ளும் பொருட்டுக் கையில் கழு வைத்திருப்பர். வித்தகநீறு - ஞானத் திருவுரு உடைய நீறு. அத்திரம் - எறியும் ஆயுதம் ; அம்பு. (10)

நற்றமிழ் ஞானசம் பந்த னுன்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமின் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே.

(கு - ரை) அஞ்செழுத்து உற்றன மாலை யீரைந்தும் வல்லவர் என்று கூட்டிப் பொருள் கொள்க. அற்றம் - குற்றம். (11)

## திருவீழிமிழலை

பண் - புறநீர்மை

கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த
கரமுரஞ் சிரநெரிந் தலற
அடர்த்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க
வருளினன் றடமிகு நெடுவாள்
படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள்
பதங்களை யோதப்பா டிருந்த
விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே.

(கு - ரை) கடுத்த - சினந்த. வாள் அரக்கன் - கொடிய இராவணன். உரம் - மார்பு. வாள் அருளினன் எனக்கூட்டுக ; வாள் - சந்திரகாசம் என்னும் பெயருடையது. பாடு இருந்த - பக்கத்து இருந்த. (8)

பண் - காந்தார பஞ்சமம்

திக்கமர் நான்முகன் மாலண்ட மண்டலந் தேடிட
மிக்கமர் தீத்திர ளாயவர் வீழிமி ழலையார்
சொக்கம தாடியும் பாடியும் பாரிடஞ் சூழ்தரும்
நக்கர்தந் நாமந மச்சிவா யவ்வென்பார் நல்லரே.

(கு - ரை) நான்முகன் அண்டத்திலும், மால் மண்தலத்திலுமாகத் தேட என நிரனிறை. தீத்திரள் - அக்கினிப் பிழம்பு. சொக்கம் - பேரழகு. பாரிடம் - பூதம். (9)

## பொது. நமச்சிவாயத் திருப்பதிகம்

பண் - காந்தார பஞ்சமம்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

(கு - ரை.) துணை சொல் வேதியன் - உயிர்களுக்கு உற்ற துணை என்று சொல்லப்படும் வேதியன். சொற்றுணை - சொற் கூட்ட மெனக்கொண்டு வேதியன் என்பதன் பகுதியாகிய வேதத் திற்கு அடையாக்கலு மொன்று. துணையடி - இணையடி. திருந்தடி- இயற்கையாகவே பாசங்களின் நீங்கி நீக்கும் திருவடி. ஆழ்த்த இணைத்த கல்லும் துணையாயிற்று என்பதை விளக்கக் கற்றுணை என்றார். இதனை அப்பர் அடிகள் பின்னர் "நல்ல நவிற்றி உய்ந்தேன்" எனல் காண்க. கற்றுணை - கல்தூணை என்பதன் குறுக்கலுமாம். (1)

## திருவாலவாய்

பண் - புறநீர்மை

நாவணங் கியல்பா மஞ்செழுத் தோதி
நல்லராய் நல்லியல் பாகும்
கோவணம் பூதி சாதனங் கண்டாற்
றொழுதெழு குலச்சிறை போற்ற
ஏவணங் கியல்பா மிராவணன் றிண்டோ
ளிருபது நெரிதர வூன்றி
ஆவணங் கொண்ட சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே.

(கு - ரை) நாஅணங்கு இயல்பு ஆம் அஞ்செழுத்து - நாக்கிற் குத் தெய்வ இயல்பை ஆக்குகின்ற அஞ்செழுத்து. வணங்கு நா இயல்பாம் அஞ்செழுத்து எனக்கொண்டு வணங்கிய நாவில் "நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே" என்றபடி இயல்பாக எழுகின்ற அஞ்செழுத்தென்றுமாம். பூதி சாதனம் : உம்மைத் தொகை. சாதனம் - உருத்திராக்கம். (8)

## திருநாவுக்கரசு சுவாமிகள்

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே.

(கு - ரை) அஞ்சு - பஞ்சகவ்வியங்கள். கோட்டம் - கொடுங்கோன்மை. (2)

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே.

(கு - ரை) உண்ணிய புகில் - உண்ணப் புகுந்தால்; உண்ணிய; செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பண்ணிய உலகு - மாயையின் காரியமாகப் பண்ணப்பட்ட உலகு. விறகின் பன்மையை நெருப்பின் ஒருமை நின்று அழிப்பது போலப் பாவத்தின் பன்மையைத் திருமந்திரம் அழிக்கு மென்பதாம். (3)

இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிராரென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னுழுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே.

(கு - ரை) விடுக்கிற்பிர் ஆர் - (இத்துன்பத்தினின்று) நீக்குவிப்பீர் யார். யாரையும் வினவுவேம் அல்லேம் எனக்கூட்டுக. அடுக்கல் - மலை. (4)

வெந்தநீ றருங்கலம் விரதிகட் கெலாம்
அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கல நமச்சி வாயவே.

(கு - ரை) வெந்த நீறு - சிவாக்கினியில் வெந்த திருநீறு. விரதி - சிவவிரத மேற்கொண்ட சிவனடியார். ஆறு அங்கம் - சிக்ஷை, கற்பம், வியாகரணம், சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்பன. திங்களுக்கு என அணி அணிவதாய்க் கூறப்பெற்றது, திங்கள் இறைவன் முடியாற் சிறப்படைதலின். (5)

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமில னொடொறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே.

(கு - ரை) சலம் - வஞ்சம். சங்கரன் - சுகத்தைச் செய்பவன். நலன் நல்குவான் என மாறுக. இத்திருப்பாடல் முன்னிரண்டடியின் கருத்து "நலமில னண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன், சலமிலன் பேர் சங்கரன்" என்பதை ஒத்துள்ளது. (6)

வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினா ரந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினே னோடிச் சென்றுருவங் காண்டலும்
நாடினே னடிற்று நமச்சி வாயவே.

(கு - ரை) வீடினார் - அழிந்தார்கள். தொண்டர் அல்லாதார் என்ற எழுவாயை வருவிக்க. அன்றித் தற்போதங்கெட்டுச் செத்தவராய் என்றுமாம். அந்நெறி - வீட்டுநெறி. நாடினேன் - ஆராய்ந்தேன். நாடிற்று - தேடியருளால் தானே வந்தடைந்தது. (7)

இல்லக விளக்கது விருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

(கு - ரை) இல்லக விளக்கு - வீட்டு விளக்கு. சொல்லக விளக்கு - சொல்லப்படுகின்ற சிவஞானப் பிரகாசம். பல் அக விளக்கு - சோம சூரியாக்கினி. இவை முறையே கண்டித வியாபகமுடையதும், அகண்டிதமானதும், கண்டாகண்டிதமாக மூவகைப்படும். ஒன்றும் மூன்றும் புறவிருள் கெடுப்பன. இரண்டாவது சோதியாய் மலவிருள் போக்குவது. அகவிளக்கு - மனவிளக்கு. (8)

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாத றிண்ணமே
அந்நெறி யேசென் றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே.

(கு - ரை) முன்னெறி - முதன்மையாகிய நெறி. முக்கணன் தன்னெறி - சைவநெறி. அங்கு - திருவடிக்கண். அடைந்தவர் - சீவன் முக்தர். (9)

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்கணில்லையே.

(கு - ரை) பிணைதழுவிய - பெண்மான்போன்ற. பூப்பிணை - பூமாலை. நாப்பிணை - நாவால் பிணையப்பட்டது ; சொன்மாலை.(10)

## திருநனிபள்ளி. திருநேரிசை

துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதி னாளு மரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா வமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி யடிக ளாரே.

(கு - ரை) இருள் துஞ்சு காலை - இருள் அழிகின்ற காலை. தொடர்ச்சி - ஆன்மாவுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு. வழக்கிலா அமணர் - கொடையறியாத சமணர். நஞ்சு அமுதாக்கி விட்டார் : திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு நஞ்சு இட்ட பாற்சோற்றை அமுதாக்கிய அருட்செய்தி. (5)

## பொது. தனித்திருநேரிசை

சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாம வேதி
அந்தரத் தமரர் பெம்மா னானல்வெள் ளூர்தி யான்றன்
மந்திர நமச்சி வாய வாகநீ றணியப் பெற்றால்
வெந்தறும் வினையு நோயும் வெவ்வழல் விறகிட் டன்றே.

(கு - ரை) சந்திரன்......சங்கரன்-குறைநோயுற்று வருந்திய சந்திரனைச் சடையிற்றாங்கிச் சுகம் செய்தவன். அறும் - இல்லையாம். (4)

## கோயில். திருவிருத்தம்

பண் - கொல்லி

வைச்ச பொருணமக் காகுமென் றெண்ணி நமச்சிவாய
அச்ச மொழிந்தே னணிதில்லை யம்பலத் தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி யுந்தியின் மேலசைத்த
கச்சி னழகுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்ப
தென்னே.

(கு - ரை) பிச்சன் - பித்தன் என்பதன் போலி. கச்சு - அரைக்கச்சு. கண்படைத்ததன் பயன் க்ச்சினழகு காண்ட லாதலின் அது முற்றிய பின் காண்டற்கொன்று மில்லை யென் பது கருத்து. (4)

படைக்கல மாகவுன் னமத் தெழுத்தஞ்செ னவிற்கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக் காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் றொழுது வணங்கித்தூ நீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம் பலத்தரனே.

(கு - ரை) படைக்கலம் - ஆயுதம். இடைக்காலம், இடைக் கலமெனக் குறுகியது. எழுபிறப்பு - ஊர்வ முதல் ஏழாகிய பிறப்பு ; இனியெழுகின்ற பிறப்பு என்றுமாம். (8)

## திருப்பாதிரிப்புலியூர். திருவிருத்தம்

வைத்த பொருணமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதைநெஞ்சே.

(கு - ரை) ஒருக்கி - ஒருவழிப் படுத்தி. (5)

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே.

(கு - ரை) கருவாய்க் கிடந்த காலத்து உரை யில்லாமையின் நினையுங்கருத்துடையே னென்றார். உருவாய் வெளிப்போந்தபின் நாமம் இடைவிடாமற் பழகினேன் என்றார். (6)

## திருவீழிமிழலை. திருவிருத்தம்

தீத்தொழி லான்றலை தீயிலிட் டுச்செய்த வேள்விசெற்றீர்
பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடை யீர்பிடித் துத்திரியும்
வேய்த்தொழி லாளர் மிழலையுள் ளீர்விக்கி யஞ்செழுத்தும்
ஓத்தொழிந் தும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.

(கு - ரை) தீத்தொழிலான் - கொடுந்தொழில் உடைய தக் கன் ; அக்னி ஹோத்திரம் பண்ணுகின்றவன் என்றுமாம்.

பிடித்துத் திரியும் பேய்த் தொழிலாட்டியை எனக்கூட்டுக ; பேய்த் தொழிலாட்டி - காளி. ஒத்து - ஓதுதல். (4)

## திருநாகைக்காரோணம். திருவிருத்தம்

தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த
காமன் பொடிபடக் காய்ந்த கடனாகைக் காரோணநின்
நாமம் பரவி நமச்சி வாயவென் னுமஞ்செழுத்தும்
சாமன் றுரைக்கத் தருதிகண் டாயெங்கள் சங்கரனே.

(கு - ரை) தீவேள்வி - அக்கினி வழிபாடு. மணந்தார்க்கன்றி அங்கி வழிபாடு இன்மையின் மலர்க்கணை கோத்து வேள்வி தொழிற் படுத்த காமன் என்றார். சாம் அன்று - இறக்கும் ஞான்று. தருதி என்றார் உரைத்தல் அருமை நோக்கி. (3)

## திருக்கடவூர்வீரட்டம். திருவிருத்தம்

பதத்தெழு மந்திர மஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணித னின்னுயி ருண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு திப்புன லாறொழுக
உதைத்தெழு சேவடி யான்கட வூருறை யுத்தமனே.

(கு - ரை) பதம் - சொல்; பரிபக்குவ காலமுமாம். மாணி - பிரமசாரியாகிய மார்க்கண்டர். கதம் - கோபம். (2)

## திருமீயச்சூரிளங்கோயில். திருக்குறுந்தொகை

பஞ்ச மந்திர மோதும் பரமனார்
அஞ்ச வானை யுரித்தன லாடுவார்
நெஞ்சம் வாழி நினைந்திரு மீயச்சூர்
எந்த மையுடை யாரிளங் கோயிலே.

(கு - ரை) பஞ்ச மந்திரம் - ஈசானாதி பஞ்ச பிரம மந்திரங்கள். அஞ்ச - மலைமகள் அஞ்ச. (3)

## திருவையாறு. திருக்குறுந்தொகை

நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே
வஞ்ச மென்பதோர் வான்சுழிப் பட்டுநான்
துஞ்சும் போழ்துநின் னாமத் திருவெழுத்
தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே.

(கு - ரை) கயம் - குளம். வான்சுழி - பெரிய நீர்ச்சுழி. துஞ்சுதல் - இறத்தல். அருளும் : முன்னிலை ஏவல் வினை முற்று. (3)

## திருநல்லம். திருக்குறுந்தொகை

அல்ல லாகவைம் பூதங்க ளாட்டினும்
வல்ல வாறு சிவாய நமவென்று
நல்ல மேவிய நாத னடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே.

(கு - ரை) அல்லல் - துன்பம். பூதங்கள் ஆட்டுதல் : ஏறியும் குறைந்தும் மாறுபட்டும் அலைத்தல். (6)

## திருப்புகலூர். திருக்குறுந்தொகை

விண்ணி னார்மதி சூடிய வேந்தனை
எண்ணி நாமங்க ளோதி யெழுத்தஞ்சும்
கண்ணி னாற்கழல் காண்பிட மேதெனில்
புண்ணி யன்புக லூருமெ னெஞ்சுமே.

(கு - ரை) கண்ணினால் - எண்ணினால்; மானதமாகச் செபித்தால். புகலூரும் என்னெஞ்சும் என்றார், இறைவன் இரண்டிடத்தும் ஒப்ப உறைதல் பற்றி; "சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான்" (திருக்கோவையார்.) (5)

## திருப்பாலைத்துறை. திருக்குறுந்தொகை

விண்ணி னார்பணிந் தேத்த வியப்புறும்
மண்ணி னார்மற வாது சிவாயவென்
றெண்ணி னார்க்கிட மாவெழில் வானகம்
பண்ணி னாரவர் பாலைத் துறையரே.

(கு - ரை) மறவாது சிவாய வென்றெண்ணினாராகிய மண்ணினார்க்கு, இடமாக வானகம் பண்ணினார் எனக்கூட்டுக. வியப்புறும் பாலைத்துறையர். (6)

## திருநாகேச்சரம். திருக்குறுந்தொகை

மானை யேந்திய கையினர் மையறு
ஞானச் சோதிய ராதியர் நாமந்தான்
ஆன வஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்
தேனர் போற்றிரு நாகேச் சரவரே.

(கு - ரை) மையறு ஞானம் - சிவஞானம். அண்ணிக்குந் தேனர் - இனிக்குந் தேன் போன்றவர். (7)

### திருப்பழையாறைவடதளி. திருக்குறுந்தொகை

ஓதி னத்தெழுத் தஞ்சுண ராச்சமண்
வேதி னைப்படுத் தானைவெங் கூற்றுதை
பாத னைப்பழை யாறை வடதளி
நாத னைத்தொழ நம்வினை நாசமே.

(கு - ரை) ஓது இனத்து எழுத்து அஞ்சு. சமண் - சமணர். (8)

### திருமாற்பேறு. திருக்குறுந்தொகை

ஏது மொன்று மறிவில ராயினும்
ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே
மாதுந் தாமு மகிழ்வர்மாற் பேறரே.

(கு - ரை) ஓதியுணர்வார்கட்கு எனக்கூட்டுக. உள்ளத்தே மாதுந்தாமும் மகிழ்தல் - மனத்து 'சிவ' என்பதன் பொருளாக மேவியிருத்தல். (1)

இருந்து சொல்லுவன் கேண்மின்க ளேழைகாள்
அருந்த வந்தரு மஞ்செழுத் தோதினல்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே.

(கு - ரை) இருந்து - கேட்பார் பக்குவம் நோக்கிப் பொறுத் திருந்து. ஏழை - அற்பமதியினர். (4)

### திருப்புள்ளிருக்குவேளூர். திருக்குறுந்தொகை

உள்ள முள்கி யுகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே.

(கு - ரை) புள்ளினார் - சடாயு, சம்பாதி. (8)

## பொது. தனித்திருக்குறுந்தொகை

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. (2)

## பொது. காலபாசத் திருக்குறுந்தொகை

இன்னங் கேண்மி னிளம்பிறை சூடிய
மன்னன் பாத மனத்துட னேத்துவார்
மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே.

(கு - ரை) சாரல் - சாருக. (9)

## பொது. சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை

நமச்சி வாயவென் பாருள ரேலவர்
தமச்ச நீங்கத் தவநெறி சார்தலால்
அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய னாகிலும்
இமைத்து நிற்பது சால வரியதே.

(கு - ரை) இத் திருப்பாடல் ஐந்தக்கரம் ஓதுவார்முன் எதிர்த்து நிற்பான் ஒருவனை நோக்கிக் கூறுவதுபோல எழுந்தது. அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கையன் ஆகிலும் - தனக்கென்று வரையறுக்கப்பட்ட கட்டுப்பாடான ஒப்பற்ற வாழ்க்கையை உடையவனாகிலும். இமைத்துநிற்பது - விளங்குவது. (22)

## திருவாவடுதுறை. திருத்தாண்டகம்

மாற்றே னெழுத்தஞ்சு மென்ற னாவின்
மறவேன் றிருவருள்கள் வஞ்ச நெஞ்சின்
ஏற்றேன் பிறதெய்வ மெண்ணா நாயே
னெம்பெருமான் றிருவடியே யெண்ணி னல்லால்
மேற்றானீ செய்வனகள் செய்யக் கண்டு
வேதனைக்கே யிடங்கொடுத்து நாளு நாளும்
ஆற்றே னடியேனை யஞ்சே லென்னா
யாவடுதண் டுறையுறையு மமர ரேறே.

(கு - ரை) மாற்றேன் - இம்மைப் பயன் கருதி மாறி உச்சரியேன். திருவருள்கள், செய்வனகள் - விகுதி வேண்டாவழி வந்தன. (2)

## திருவீழிமிழலை. திருத்தாண்டகம்

தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத்
தோன்றிய வெவ்வுயிர்க்குந் துணையாய் நின்ற
தாயானைச் சக்கரமாற் கீந்தான் றன்னைச்
சங்கரனைச் சந்தோக சாம மோதும்
வாயானை மந்திரிப்பார் மனத்து ளானை
வஞ்சனையா லஞ்செழுத்தும் வழுத்து வார்க்குச்
சேயானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே.

(கு - ரை) சந்தோகசாமம் - சந்தோகமென்னும் பிரிவினையுடைய சாமவேதம். மந்திரிப்பார் - ஜபிப்பவர். சேயான் - தூரத்திலுள்ளவன். (4)

ஆலைப் படுகரும்பின் சாறு போல
வண்ணிக்கு மஞ்செழுத்தி னமத் தான்காண்
சீல முடையடியார் சிந்தை யான்காண்
டிரிபுரமூன் றெரிபடுத்த சிலையி னான்காண்
பாலினொடு தயிர்நறுநெய் யாடி னான்காண்
பண்டரங்க வேடன்காண் பலிதேர்வான்காண்
வேலை விடமுண்ட மிடற்றினன்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே.

(கு - ரை) அண்ணித்தல் - தித்தித்தல். சீலம் - தவவொழுக்கம். பாலினொடு தயிர் நறுநெய் ஆடினான் - இது "ஆடினாய் நறுநெய்யொடு பால் தயிர்" என்னும் (கோயிற் றேவாரம்) ஞானசம்பந்தப் பெருமான் வாக்கை நினைவூட்டுகிறது. பண்டரங்கம் - ஒரு வகைக் கூத்து. (5)

மாலாலு மறிவரிய வரதர் போலு
மறவாதார் பிறப்பறுக்க வல்லார் போலும்
நாலாய மறைக்கிறைவ ரானார் போலு
நாமவெழுத் தஞ்சாய நம்பர் போலும்

வேலார்கை வீரியைமுன் படைத்தார் போலும்
    வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
ஆலால மிடற்றடக்கி யளித்தார் போலும்
    அடியேனை யாளுடைய வடிக டாமே.

(கு - ரை) மறவாதார் - இடைவிடாது எண்ணும் அடியார். வேல் - சூலம். வீரி - காளி. (6)

## திருக்கன்றுப்பூர். திருத்தாண்டகம்

பொசியினுன் மிடைந்துபுழுப் பொதிந்த போர்வைப்
    பொல்லாத புலாலுடம்பை நிலாசு மென்று
பசியினுன் மீதூரப் பட்டே யீட்டிப்
    பலர்க்குதவ லதுவொழிந்து பவள வாயார்
வசியினு லகப்பட்டு வீழா முன்னம்
    வானவர்கோன் றிருநாம மஞ்சுஞ் சொல்லிக்
கசிவினுற் றெழுமடியார் நெஞ்சி னுள்ளே
    கன்றுப்பூர் நடுதறியைக் காண லாமே.

(கு - ரை) பொசி - துவாரம். நிலாசும் - நிலைபெறும். பொருளீட்டல் பசியினுல் என்பதும், ஈட்டிய பொருளை ஈந்து உவக்க வேண்டுமென்பதும் அறிவிக்கப்படுகின்றன. வசி - மயக்கம்; முதனிலைத் தொழிற் பெயர். (6)

திருதிமையா லைவரையுங் காவ லேவித்
    திகையாதே சிவாயநம வென்னுஞ் சிந்தைச்
சுருதிதனைத் துயக்கறுத்துத் துன்ப வெள்ளக்
    கடனீந்திக் கரையேறுங் கருத்தே மிக்குப்
பருதிதனைப் பற்பறித்த பாவ நாசா
    பரஞ்சுடரே யென்றென்று பரவி நாளும்
கருதிமிகத் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
    கன்றுப்பூர் நடுதறியைக் காண லாமே.

(கு - ரை) திருதிமை - தைரியம்; மை பகுதிப் பொருள் விகுதி. ஐவர் - பஞ்சேந்திரியங்கள். திகையாது - மயங்காமல். சுருதி - மந்திரம். துயக்கு - மலத்தொடக்கு. பருதி - பூஷாவென்னுஞ் சூரியன். (8)

## திருக்கச்சியேகம்பம். திருத்தாண்டகம்

வருந்தான்காண் மனமுருகி நினையா தார்க்கு
வஞ்சகன்கா ணஞ்செழுத்து நினைவார்க் கென்றும்
மருந்தவன்காண் வான்பிணிக ளுரும் வண்ணம்
வானகமு மண்ணகமு மற்று மாகிப்
பரந்தவன்காண் படர்சடையெட் டுடையான் றன்காண்
பங்கயத்தோன் றன்சிரத்தை யேந்தி யூரூர்
இரந்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே.

(கு - ரை) நினையாதார்க்கு வருந்தான் வஞ்சகன் எனக் கூட்டுக. மருந்தவன் - மருந்தானவன். வான்பிணி - வான் போன்று பரந்த பாசப் பிணி. (9)

## திருநாகேச்சரம். திருத்தாண்டகம்

துறந்தானை யறம்புரியாத் துரிசர் தம்மைத்
தோத்திரங்கள் பலசொல்லி வானோ ரேத்த
நிறைந்தானை நீர்நிலந்தீ வெளிகாற் றாகி
நிற்பனவு நடப்பனவு மாயி னானை
மறந்தானைத் தன்னினையா வஞ்சர் தம்மை
யஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க் கென்றும்
சிறந்தானைத் திருநாகேச் சரத்துளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே.

(கு - ரை) துரிசர் - குற்றமுடையோர். நிறைந்தான் - எங்குமாய் என்றுமாய் நிறைந்தவன். சேராதார் - தியானியாதவர்; “இறைவனடி சேராதார்” (திருக்குறள்) என்பதுபோல. (6)

## பொது. பலவகைத் திருத்தாண்டகம்,

தந்தையார் தாயா ருடன்பி றந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமா மிதற்கேது மகிழ வேண்டாம்

சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின்
றிகழ்மதியும் வாளரவுந் திளைக்குஞ் சென்னி
எந்தையார் திருநாம நமச்சி வாய
வென்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே.

(கு - ரை) ஏதும் - சிறிதும். மதியும் அரவும் திளைக்கும் சென்னி : பிறவியிலே பகையாகிய மதியும், பாம்பும் பகைநீங்கிக் கலந்து மகிழ்தல் இறைவன் திருமுடியின் சிறப்பு. (10)

## பொது. தனித் திருத்தாண்டகம்

திருநாம மஞ்செழுத்துஞ் செப்பா ராகிற்
றீவண்ணர் திறமொருகாற் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகி
லுண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகி
லளியற்றார் பிறந்தவா றேதோ வென்னில்
பெருநோய்கண் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே.

(கு - ரை) உண்பதன்முன் - வண்டுகள் தேனுண்பதற்கு முன்னுள்ள விடியலில்; தாம் உண்பதன்முன் எனினுமாம். அருநோய் - வேறொன்றாலும் நீங்காத பிறவிநோய். அளி - கருணை. (6)

## பொது. மறுமாற்றத் திருத்தாண்டகம்

உறவாவா ருருத்திரபல் கணத்தி னோர்க
ளுடுப்பனகோ வணத்தொடுகீ ளுளவா மன்றே
செறுவாருஞ் செறமாட்டார் தீமை தானு
நன்மையாய்ச் சிறப்பதே பிறப்பிற் செல்லோம்
நறவார்பொன் னிதழிநறுந் தாரோன் சீரார்
நமச்சிவா யஞ்சொல்ல வல்லோ நாவால்
சுறவாருங் கொடியானைப் பொடியாக் கண்ட
சுடர்நயனச் சோதியையே தொடர்வுற் றோமே.

(கு - ரை) கீள் - கிழிக்கப்பட்ட துணி; இலங்கோடு என வழங்குவது. செறுவார் - வருத்துபவர்களாகிய பகைவர்கள். நறவு - தேன். இதழி - கொன்றை. சுறவாருங் கொடியான் - மன்மதன். (4)

மூவுருவின் முதலுருவா யிருநான் கான
மூர்த்தியே யென்றுமுப் பத்து மூவர்
தேவர்களு மிக்கோருஞ் சிறந்து வாழ்த்துஞ்
செம்பவளத் திருமேனிச் சிவனே யென்னும்
நாவுடையார் நமையாள வுடையா ரன்றே
நாவலந்தீ வகத்தினுக்கு நாத ரான
காவலரே யேவி விடுத்தா ரேனுங்
கடவமலோங் கடுமையொடு களவற் றேமே.

(கு - ரை) மூவுருவு - பிரமா, விஷ்ணு, உருத்திரன் ஆன அதிகாரத்திலிருப்பார் மூவருரு ; அருவம், அருவுருவம், உருவம் என்ற மூன்றும் ஆம். இரு நான்கான மூர்த்தி - அஷ்டமூர்த்தி. மிக்கோர் - முனிவர் ; தேவர்களில் மிக்கோராயின் இந்திரன், பிரமன், திருமால் முதலியோர்களுமாம். ஆள உடையார் - ஆளஉரிமை உடையார். கடுமை - கொடுமை. (6)

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### திருவலிவலம். பண் - தக்கேசி

ஊனங் கத்துயிர்ப் பாயுல கெல்லா
மோங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கைத்தவர்க் குமளப் பரிய
வள்ள லையடி யார்கடம் முள்ளத்
தேனங் கைத்தமு தாகியுள் ளூறுந்
தேச னைத்தினைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.

(கு - ரை) ஊன் அங்கத்து - ஊனை அங்கமாகக் கொண்ட உடலில். உயிர்ப்பாய் - மூச்சுக் காற்றாய். வானங் கைத்தவர் - சுவர்க்க போகமே பெரிதென்று எண்ணி நுகர்ந்து வெறுத்த வர்கள். தேனங் கைத்து : அம் சாரியை. தேசன் - ஒளிவடிவ மானவன். மான் அங்கைத்தலத்து ஏந்த வல்லாள் - தாருகா வனத்து முனிவர்களால் அனுப்பப்பட்ட மானைத் திருக்கரத்தில் ஏந்தவல்லவர். (1)

## திருப்பாண்டிக்கொடுமுடி. பண் - பழம்பஞ்சுரம்

மற்றுப்பற்றெனக் கின்றிநின்றிருப்
பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற
வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநா நமச்சிவாயவே.

(கு - ரை) பாவித்தல் - தியானித்தல். பெற்றல் - பெறுதல். பிறந்தேன் என்றார் பிறவிப் பயனை எய்தினமையின். (1)

இட்டனும்மடி யேத்துவாரிகழ்ந்
திட்டநாண்மறந் திட்டநாள்
கெட்டநாளிவை யென்றலாற்கரு
தேன்கிளர்புனற் காவிரி
வட்டவாசிகை கொண்டடிதொழு
தேத்துபாண்டிக் கொடுமுடி
நட்டவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) வட்டவாசிகை - வட்டமாகிய பூமாலை. நட்டவன் - நட்புக் கொண்டவன். (2)

ஓவுநாளுணர் வழியுநாளுயிர்
போகுநாளுயர் பாடைமேல்
காவுநாளிவை யென்றலாற்கரு
தேன்கிளர்புனற் காவிரிப்
பாவுதண்புனல் வந்திழிபரஞ்
சோதிபாண்டிக் கொடுமுடி
நாவலாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) ஓவுநாள் - ஐந்தெழுத்தை ஓதாது ஒழிந்த நாட்கள். காவுதல் - தூக்குதல். பாவுதண்புனல் - பரந்த குளிர்ந்த நீர். (3)

எல்லையில்புக ழெம்பிரானெந்தை
தம்பிரானென்பொன் மாமணி
கல்லையுந்தி வளம்பொழிந்திழி
காவிரியதன் வாய்க்கரை
நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
வல்லவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) தம்பிரான் - தமக்குத் தலைவன் தாமேயாயிருப்பவன். உந்தி - செலுத்தி.

அஞ்சினார்க்கர ணாதியென்றடி
யேனுநான்மிக வஞ்சினேன்
அஞ்சலென்றடித் தொண்டனேற்கரு
ணல்கினாய்க்கழி கின்றதென்
பஞ்சின்மெல்லடிப் பாவைமார்குடைந்
தாடுபாண்டிக் கொடுமுடி
நஞ்சணிகண்ட நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) அரண் - அடைக்கலமான இடம். அருள் நல்கினாய்க்கு அழிகின்றது என் - திருவருள் பாலித்தால் உனக்கு வரும் நஷ்டமென்ன? (5)

ஏடுவானிளந் திங்கள்சூடினை
யென்பின்கொல்புலித் தோலின்மேல்
ஆடுபாம்ப தரைக்கசைத்த
வழகனேயந்தண் காவிரிப்
பாடுதண்புனல் வந்திழிபரஞ்
சோதிபாண்டிக் கொடுமுடிச்
சேடனேயுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) ஏடு - தகடு; இதழுமாம். அசைத்தல் - கட்டுதல். பாடு - பக்கம். சேடன் - சர்வசங்கார காலத்து மிச்சமாய் நிற்பவன். (6)

விரும்பிநின்மலர்ப் பாதமேநினைந்
தேன்வினைகளும் விண்டன
நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற
நின்றகாவிரிக் கோட்டிடைக்
குரும்பைமென்முலைக் கோதைமார்குடைந்
தாடுபாண்டிக் கொடுமுடி
விரும்பனேயுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) வினைகளும் விண்டன - வினைகளும் விலகின. கோடு - கரை. விரும்பன் - விரும்புதலையுடையவன். (7)

செம்பொனேர்சடை யாய்திரிபுரந்
தீயெழச்சிலை கோவினாய்
வம்புலாங்குழ லாளைப்பாக
மமர்ந்துகாவிரிக் கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில் கூவமாமயி
லாடுபாண்டிக் கொடுமுடி
நம்பனேயுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) ஏர் : உவமவுருபு. செம்பொன் நேர் சடை என்றும் பிரிக்கலாம். கோவினாய் - வளைத்தாய். வம்பு - மணம். நம்பன் - நம்பத்தக்கவன். (8)

சாரணன்றந்தை யெம்பிரானெந்தை
தம்பிரானென்பொன் மாமணியென்று
பேரெணாயிர கோடிதேவர்
பிதற்றிநின்று பிரிகிலார்
நாரணன்பிர மன்றொழுங்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடிக்
காரணாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

(கு - ரை) சாரணன் - சார்தற்கிடமானவன். எண்ணாயிர கோடி யென்றது பன்மை குறித்தல் மாத்திரையாய் நின்றது. (9)

### திருவாரூர். பண் - புறநீர்மை

அந்தியு நண்பகலு மஞ்சுப தஞ்சொல்லி
முந்தி யெழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்றிரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை யென்றுகொ லெய்துவதே.

(கு - ரை) அந்தி - சந்தியென்பதன் திரிபு; சபை - அவை என்பதுபோல. அந்தி - காலையும் மாலையுமாகிய இரண்டும். நண் பகல் - நடுப்பகல். அஞ்சுபதம் - பஞ்சாக்கரம். ஐந்தும் எழுத் தாயினும் ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வொரு பொருளுணர்த்தும்; ஆதலின் பதம் என்றருளிச் செய்தார்கள். பழைய வல்வினை - ஆகாமிய சஞ்சித வினைகள். பராமரியா - பாதுகாத்து. (1)

---

## மாணிக்கவாசக சுவாமிகள்

### திருவாசகம். சிவபுராணம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க.

(கு - ரை) நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்து வாழ்வ தாகுக.

### திருச்சதகம். 3. சுட்டறுத்தல்

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
 தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
 கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
 யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
 கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே.

(கு - ரை) பௌவம் - கடல். எவ்வம் - துன்பம். கனி - கொவ் வைக்கனி. கால் - காற்று. வான்சுறவு - பெரிய சுறுமீன். என்று என்று எண்ணி - பலகால் எண்ணி. புணை - தெப்பம். முதலந்த

மில்லா மல்லல்கரை - ஆதியும் அந்தமும் இல்லாத திருவடிக்கரை ; மல்லல் - வளம். (27)

### திருச்சதகம். 7. காருணியத்திரங்கல்

போற்றியோ நமச்சி வாய
புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய
புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய
புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய
சயசய போற்றி போற்றி.

(கு - ரை) புயங்கன் - பாம்பையணிந்தவன் ; புயங்க நடனம் ஆடுபவன் என்றுமாம். ஓகாரங்கள் இரக்கப்பொருளில் வந்தன. (62)

### செத்திலாப்பத்து

மாய னேமறி கடல்விட முண்ட
வான வாமணி கண்டத்தெம் மமுதே
நாயி னேனுனை நினையவு மாட்டே
னமச்சி வாயவென் றுன்னடி பணியாப்
பேய னாகிலும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய னாகினின் றலறுவ தழகோ
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

(கு - ரை) மாயன் - திரோதத்தைத் தன் சத்தியாகக் கொண்டவன். மணி - நீலம். பெருநெறி - முத்தி. பிஞ்ஞகன் - மயிற்பீலி யணிந்தவன். (7)

### திருவேசறவு

நானேயோ தவஞ்செய்தேன்
சிவாயநம வெனப்பெற்றேன்
றேனாயின் னமுதமுமாய்த்
தித்திக்குஞ் சிவபெருமான்

ருனேவந் தெனதுள்ளம்
புகுந்தடியேற் கருள்செய்தா
னூனரு முயிர்வாழ்க்கை
யொறுத்தன்றே வெறுத்திடவே.

(கு - ரை) நானேயோ : ஓகாரம் சிறப்புப் பொருட்கண் வந்தது. தேன் தித்தித்து உள்ள உறுதியையாக்கும். அமுதம் தித்தித்து இறவாமையை எய்துவிக்கும். இரண்டு பயனும் எளிதில் ஒருசேர இனித்தே தருகின்றார் இறைவர் என்பதாம். 'தானே வந்து புகுந்து' என்பது இறைவனது எளிவந்த கருணையையும், ஆன்மாவின் சுதந்திர மின்மையையும் காட்டி நிற்கின்றது. ஊன்- உடல். ஒறுத்து அன்றே வெறுத்திட அருள் செய்தானென இயைக்க. (10)

---

## திருவிசைப்பா

### திருமாளிகைத்தேவர். 3. கோயில்

பண் - பஞ்சமம்

உற்றாய் என்னும்உன்னை யன்றி மற்றொன்
றுணரே னென்னும் உணர்வுகள் கலக்கப்
பெற்றாய ஐந்தெழுத்தும் பிதற்றிப் பிணிதீர
வெண்ணீறிடப் பெற்றே னென்னுஞ்
சுற்றாய சோதி மகேந்தி ரஞ்சூழ
மனத்திருள் வாங்கிச் சூழாத நெஞ்சிற்
குற்றாயென்னுங் குணக்குன்றே யென்னுங்
குலாத்தில்லை அம்பலக் கூத்தனையே.

(கு - ரை) இது தலைவி கூற்றாகத் தாய் கொண்டு கூறுவது. உணர்வுகள் கலக்கப்பெற்று ஆய ஐந்தெழுத்து - உணர்ச்சிக் கெல்லாம் புறத்தே செல்லாது அகத்தே கலக்கப் பெறுதலாலாகிய ஐந்தெழுத்து. சூழாத நெஞ்சு - எண்ணாத மனம். குற்றாய் - இருத்துவாய். குலாத்தில்லை - விளங்குகின்ற தில்லை. (11)

### சேந்தனார்

திருவாவடுதுறை. பண் - பஞ்சமம்

திலகநுதலுமை நங்கைக்குந்திருவா
வடுதுறை நம்பிக்கும்
குலக அடியவர்க் கென்னையாட் கொடுத்தாண்டு
கொண்ட குணக்கடல்
அலதொன் றறிகின்றி லேமெனும்
அணியும்வெண் ணீறஞ் செழுத்தலால்
வலதொன்றிலள் இதற்கென் செய்கேன்
வயலந்தண் சாந்தையர் வேந்தனே. (5)

### கருவூர்த்தேவர்

கங்கைகொண்ட சோளேச்சரம் பண் - பஞ்சமம்

அற்புதத்தெய்வம் இதனின்மற் றுண்டே
அன்பொடு தன்னையஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளமள்ளூறுந்
தொண்டருக் கெண்தசைக்கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாம் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே.

(கு - ரை) அற்புதம் - முன்னும் பின்னும் இல்லாத ஒன்று. சொற்பதம் : இருபெயரொட்டுப் பண்புத் தொகை. அள்ளூறுதல் - அள்ள ஊறுதல். (3)

## திருமந்திரம்

ஓடிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்
வாடி முகமும் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி இறைவா நமஎன்று கும்பிட
ஈடில் புகழோன் எழுகவென் றானே.

(கு - ரை) (பாற்கடல் கடைந்த காலத்து) ஒருங்கிய - ஒன்று கூடிய. இறைவா நம என்பது திருவைந்தெழுத்தை மறைத்துக் கூறியது. இறைவன் என்பதற்கும் சிவன் என்பதற்கும் தங்குத லுடையவன் என்பது பகுதிப் பொருளாதலின் சிவாய என்ப

தையே இறைவா என்றார் எனலுமாம். கும்பிட - விழுந்து கும்பிட. (352)

கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
அண்டத்துள் ஊறி யிருந்தெண் டிரையாகி
ஒன்றின்பதஞ்செய்த ஓம்என்ற அப்புறக்
குண்டத்தின் மேல்அங்கி கோலிக்கொண் டானே.

(கு - ரை) ஒன்றின் - மாயையின். அங்கி - அக்கினி. கோலிக் கொண்டான் - திரட்டிக்கொண்டான். (424)

கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற்கோல அஞ்செழுத் தாமே.

(கு - ரை) கூடம் என்றது உடலை. குடிபுக்க மங்கையர் - பிராணன் உச்சுவாசம் செய்வதனை ஓடுவர் என்றும், நிச்சுவாசம் செய்வதனை மீளுவர் என்றும் கூறினர். எண் விரல் நீடுவர் என்றது பிராணயாமத்துப் பூரகஞ் செய்யுங்கால் எண்விரல் வந்து நிறையும். நான்கு அங்குலம் வாராது. கூடிக் கொள்ளில் - கும்பக ரேசகத்தால் கண்டித்த நால்விரலும் கூடினால். (576)

ஊனீர் வழியாக வுண்ணவை யேறிட்டுத்
தேனீர் பருகிச் சிவாய நமவென்று
கானீர் வரும்வழி கங்கை தருவிக்கும்
வானீர் வரும்வழி வாய்ந்தறி வீரே.

(கு - ரை) ஊன் நீர்-எச்சில்; கோழையுமாம். ஊனீர் வழியாக-மேலண்ணத்தின் துவாரம் வழியாக. தேனீர் பருகி - அமுதச் சுவையைப் பருகி. கான் - மேல்வீடு. கங்கை - இடைகலை. வான்நீர் - அமுதம். (809)

போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை
ஏற்றுகின் றேன்நம் பிரான்ஓர் எழுத்தே.

(கு - ரை) அறை ஓ - சக்கரமும் பிரணவமும். ஓர் எழுத்து - அஜபா மந்திரம். இது பிரணவ பஞ்சாக்கரம். (884)

ஓரெழுத் தாலே உலகெங்குந் தானாகி
ஈரெழுத் தாலே இசைந்தங் கிருவராய்
மூவெழுத் தாலே மூளைக்கின்ற சோதியை
மாவெழுத் தாலே மயக்கமே உற்றதே.

(கு - ரை) ஓரெழுத்து - சமஷ்டிப் பிரணவம். ஈரெழுத்து - வியஷ்டியுள் அகார உகாரங்கள். இருவராய் என்றது சிவம் சக்தி யாகிய இருவராதலே. மூவெழுத்து - பூரண வியஷ்டியான அகார உகார மகாரங்கள். மாவெழுத்து மகாரம் ; அது மாயை. (885)

தாண்டவ மான தனியெழுத் தோரெழுத்
தாண்டவ மான தனுக்கிர கத்தொழில்
தாண்டவக் கூத்துத் தனிநின்ற தற்பரந்
தாண்டவக் கூத்துத் தமனியந் தானே.

(கு - ரை) தாண்டவமான தனியெழுத்து - ஆனந்தக்கூத்தன் அறிவிக்கும் ஐந்தெழுத்து. ஆண்ட அம்மானது அனுக்கிரகத் தொழில் எனப் பிரிக்க. தொழில் - பஞ்சகிருத்திய நடனம். தற்பரம் - தற்பரக் கூத்து. தமனியம் - பொன். (888)

தராதல மூலைக்குத் தற்பர மாபரன்
தராதலம் வெப்பு நமவா சியவாந்
தராதலஞ் சொல்லிற் றான்வா சியவாகுந்
தராதல யோகந் தயாவாசி யாமே.

(கு - ரை) மூலை - மூலாதாரம். வெப்பு - அங்கிமண்டலம். இதனுள் ஐந்தெழுத்து நமவாசிய, வாசிய, யவாசி யென மாறி யிருத்தல் காண்க. (890)

ஆமே சிவங்கள் அகார உகாரங்கள்
ஆமே பரங்கள் அறியா விடம்என்ப
ஆமே திருக்கூத் தடங்கிய சிற்பரம்
ஆமே சிவகதி ஆனந்த மாமே.

(கு - ரை) அறியாவிடம் - சூனிய ஆகாசம். சிற்பரம் - ஞானாகாசம். சிவகதி - சிவத்திற்கிடம். (891)

ஆனந்த மூன்றும் அறிவிரண் டொன்றாகும்
ஆனந்தஞ் சிவாய அறிவார் பலரில்லை
ஆனந்த மோடும் அறியவல் லார்கட்கு
ஆனந்தக் கூத்தாய் அகப்படுந் தானே.

(கு - ரை) மூன்று - அகார உகார ம்காரங்கள். இரண்டு - சிவம் சக்தி. ஒன்றாகும் ஆனந்தம் - யகரமாகிய ஆன்மா இரண்டோடு ஒன்றுபடும் ஆனந்தம். அதுவே சிவாய. (892)

படுவ திரண்டும் பலகலை வல்லார்
படுவ தோங்காரம் பஞ்சாக் கரங்கள்
படுவது சங்காரத் தாண்டவப் பத்தி
படுவது கோணம் பரந்திடும் வாறே.

(கு - ரை) இரண்டு - அம்சமந்திரம் இரண்டு. பத்தி - முறை. கோணம் - திசை. (893)

இணையார் திருவடி எட்டெழுத் தாகும்
இணையார் கழலிணை யீரைஞ்ச தாகும்
இணையார் கழலிணை ஐம்பத்தொன் றாகும்
இணையார் கழலிணை ஏழாயிரமே.

(கு - ரை) எட்டெழுத்து - அகரம். இது சிவம். இணையார் கழல் இணை ஈரைந்தது. சிவத்தின் கழலை யிணைவது பத்து, ய; ஆன்மா. ஐம்பத்தொன்று - அகாராதி க்ஷகாராந்தம் ஐம்பத்தொன்றாகும். (898)

சூக்குமம் எண்ணா யிரம்செபித் தாலுமேல்
சூக்கும மான வழியிடைக் காணலாம்
சூக்கும மான வினையைக் கெடுக்கலாம்
சூக்கும மான சிவனதா னந்தமே.

(கு - ரை) சூக்குமம் - சூக்கும பஞ்சாக்கரம். சூக்குமமான வழி - பிரம்மரந்திரம். சூக்கும வினை - புத்தி தத்துவத்தினிடமாக மாயையிற் கிடக்கும் சூக்ஷ்ம கன்மங்கள். (909)

ஏழா யிரமாய் இருபதாய் முப்பதாய்
ஏழா யிரத்தும் எழுகோடி தானாகி
ஏழா யிரத்துயிர் எண்ணிலா மந்திரம்
ஏழா யிரண்டாய் இருக்கின்ற வாறே.

(கு - ரை) இருபதாய் முப்பதாய் - ஐம்பதக்கரங்களாக. எழு கோடி - நம:, ஸ்வாஹா, ஸ்வதா, வஷட், வௌஷட், பட் என்ற ஏழு இறுதியை யுடையன. (899)

இருக்கின்ற மந்திரம் ஏழா யிரமாம்
இருக்கின்ற மந்திரம் இத்திறம் இல்லை
இருக்கின்ற மந்திரஞ் சிவன்திரு;மேனி
இருக்கின்ற மந்திரம் இவ்வண்ணந் தானே.

(கு - ரை) எல்லா மந்திரங்களினும் அஜபையைப்போன்று சிறந்ததில்லையென்பதாம். (960)

தானே தனக்குத் தகுநட்டந் தானாகும்
தானே அகார உகாரம தாய்நிற்கும்
தானே ரீங்காரத் தத்துவக் கூத்துக்குத்
தானே உலகில் தனிநடந் தானே.

(கு - ரை) ரீங்காரத் தத்துவக் கூத்து - மாயேயமான கூத்து; ரீங்காரம் - மாயையின் பீஜமந்திரம். (901)

செம்புபொன் னாகுஞ் சிவாய நமவென்னிற்
செம்புபொன் னாகத் திரண்டது சிற்பரஞ்
செம்புபொன் னாகும் ஸ்ரீயுங் கிரீயுமெனச்
செம்புபொன் னான திருவம் பலமே.

(கு - ரை) செம்பு பொன்னாதல் - இயற்கையே களிதமுடைய செம்பு போன்று அநாதியே மலபந்தமான ஆன்மா மல நீங்கிப் பொன்போல் இயற்கையொளி யெய்துதல். (903)

திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத்
திருவம் பலமாக ஈராறு கீறித்
திருவம் பலமாக இருபத்தைஞ் சாக்கித்
திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே.

(கு - ரை) குறுக்கு நெடுக்குமாக ஆறுகோடுகளைக் கீற இருபத்தைந்து அறைகளாகும். அதில் பஞ்சாக்கரங்களை மாறிவிட்டுச் செபிப்பது : திருவம்பலம். (904 )

வாறே சிவாய நமச்சி வாயநம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை
வாறே அருளால் வளர்கூத்துக் காணலாம்
வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே.

(கு - ரை) வாறு - இவ்வாறு. சிகாரத்தை முதலாகக் கொண்டு உச்சரிப்பதால் பிறப்பில்லை யென்பதைக் காட்டுகிறது. (905)

ஆனந்தம் ஆனந்தம் ஒன்றென் றறைந்திட
ஆனந்தம் ஆனந்தம் ஆ-ஈ-ஊ-ஏ-ஓம்மென் றைந்திடம்
ஆனந்தம் ஆனந்தம் அஞ்சும தாயிடும்
ஆனந்தம் ஆனந்தம் அம்-ஹ்ரீம்-அம்-க்ஷம்-ஆம்-ஆகுமே.

(கு - ரை.) சிதம்பரச் சக்கரத்திட வேண்டிய பீஜாக்ஷரங்கள் பத்தையும் எண்ணிக்காண்க. (910)

மேனி யிரண்டும் விளங்காமல் மேல்கொள்ள
மேனி யிரண்டும் மிக்கார விகாரியா
மேனி யிரண்டும் ஊ-ஆ-ஈ-ஏ-ஓ-என்னும்
மேனி யிரண்டும் ஈ-ஓ-ஊ-ஆ-எ கூத்தாமே. (911)

கூத்தே சிவாய நமமசி வாயிடுங்
கூத்தே ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவாயநம வாயிடுங்
கூத்தே ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவயநம வாயிடுங்
கூத்தே-இ-ஊ-ஏ-ஓம்-நமசிவாய கோளொன்றுமாறே. (912)

தானொன் றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந்
தானொன் று மந்நான்குந் தன்பே ரெழுத்தாகுந்
தானொன் று நாற்கோணந் தன்னைந் தெழுத்தாகுந்
தானொன் றி லேயொன் று மவ்வரன் தானே.

(கு - ரை) தான் - சிவம். தன்னெழுத்து - சிகரம். அந்நான்கு - சிகர மொழிந்த நான்கு எழுத்துக்கள். (915)

ஆலய மாக அமர்ந்தபஞ் சாக்கரம்
ஆலய மாக அமர்ந்தவித் தூலம்போய்
ஆலய மாக வறிகின்ற சூக்குமம்
ஆலய மாக அமர்ந்திருந் தானே.

(கு - ரை) தூலம் - தூலபஞ்சாக்கரம். சூக்குமம் - சூக்கும பஞ்சாக்கரம். (919)

*இருந்த இவ் வட்டம் இருமூன்றி ரேகை*
*இருந்த வதனுள் இரேகையைந் தாக*
*இருந்த அறைகள் இருபத்தைஞ் சாக*
*இருந்த அறையொன்றில் எய்து மகாரமே.*

(கு - ரை) 904-ஆம் பாடல் பார்க்க. அகாரம் - சிவம். (920)

*மகார நடுவே வளைத்திடுஞ் சத்தியை*
*ஓகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி*
*அகாரந் தலையாய் இருகண் சிகாரமாய்*
*நகார வகாரநற் காலது நாடுமே.*

(கு - ரை) மகாரம் - நாதம். சத்தி - ஹ்ரீம் ஸ்ரீம் என்பன. வளைத்திட்டு - வளையஎழுதி. ‘ம்’ : மகாரம். இம்மந்திரப்பாடல் திருவம்பலச் சக்கரத்துள் இறைவனை உருவமாகக் காணுமுறை கூறுகிறது. (921)

*நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்*
*ஆடு மவர்வாய் அமர்ந்தங்கு நின்றது*
*நாடு நடுவுண் முகநம சிவாய*
*வாடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே.*

(கு - ரை) இருபக்கம் - பிரணவத்தின் இருபக்கம். அவர் - சி. வ. புறவட்டம் - மேல்வட்டம். (922)

*ஆயுஞ் சிவாய நமமசி வாயந*
*வாயு நமசிவா யயநம சிவாயந*
*வாயுமே வாய நமசியெனு மந்திர*
*மாயுஞ் சிகாரந் தொட்டந்தந் தடைவிலே.*

(கு - ரை) சிவாய நம, மசிவாய ந, நமசிவாய., யநமசிவா, வாய நமசி என்று சிகார முதலாக மாறுமுறை கூறுகின்றது இப்பாடல்.

*அடைவினில் ஐம்பதும் ஐயைந் தறையின்*
*அடையும் அறையொன்றுக் கீரெழுத் தாக்கி*
*அடையு மகாரத்தில் அந்தமாம் க்ஷவ்வும்*
*அடைவின் எழுத்தைம் பத்தொன் றும் அமர்ந்ததே.*

(கு - ரை) ஐம்பது - அகாராதி ஐம்பது எழுத்துக்கள். இருபத்தைந்தறையில் அறையொன்றுச்கு இரண்டு எழுத்துக்களாக அடையும் என்பதாம். க்ஷ பிரணவ மகாரத்தில் அடையும். இவ்வாறு பகுத்து அறிந்து அடைக்க என்பதாம். (924)

அமர்ந்த அரகர வாம்புற வட்டம்
அமர்ந்த அரிகரி யாமத னுள்வட்டம்
அமர்ந்த அசபை யாம்அத னுள்வட்டம்
அமர்ந்தஇ ரேகையும் ஆகின்ற சூலமே. (925)

சூலத் தலையினில் தோற்றிடுஞ் சத்தியுஞ்
சூலத் தலையினிற் சூழும்ஓங் காரத்தால்
சூலத் திடைவெளி தோற்றிடும் அஞ்செழுத்
தாலப் பதிக்கும் அடைவது வாமே.
(கு - ரை) சத்தி - சத்தி பீஜங்கள். (926)

அதுவாம் அகார இகார உகாரம்
அதுவாம் எகாரம் ஒகார மதஞ்சாம்
அதுவாகுஞ் சக்கர வட்டமேல் வட்டம்
பொதுவாம் இடைவெளி பொங்குநம் பேரே.
(கு - ரை) நம்பேர் - நம ஆதியான பஞ்சாக்கரம். (927)

ஆறெட் டெழுத்தின்மே லாறும் பதினலும்
ஏறெட் டதன்மேலே விந்துவும் நாதமுஞ்
சீறிட்டு நின்று சிவாய நமவென்னக்
கூறிட்டு மும்மலங் கூப்பிட்டுப் போமே.
(கு - ரை) ஆறெட்டெழுத்து - நாற்பத்தெட்டாவது அக்கரமாகிய வ. ஆறு - ஊ. பதினலு - ஔ. எட்டு - அகரம். விந்து - மகரம். நாதம் - பிரணவம். மும்மலம் கூறிட்டு - மலங்கள் பிளந்து. கூப்பிட்டு - கதறிக்கொண்டு. (930)

அண்ணல் இருப்ப தவளக் கரத்துளே
பெண்ணினல் லாளும் பிரானக் கரத்துளே
எண்ணி இருவர் இசைந்தங் கிருந்திடப்
புண்ணிய வாளர் பொருளறி வார்களே.
(கு - ரை) அவளக்கரம் - வ. பிரானக்கரம் - சி. பொருளறிவார்கள் - சிவபரம் பொருளை யனுபவித்தறிவர். புண்ணியவாளர் - யகரம். (931)

அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்து
இவ்விட்டுப் பார்க்கில் இலிங்கம தாய்நிற்கும்
மவ்விட்டு மேலே வளியுறுக் கண்டபின்
தொம்மிட்டு நின்ற சுடர்க்கொழுந் தாமே.

(கு - ரை) அ இட்டு அர இட்டு இ இட்டு; இட்டு - எழுதி. (932)

அஞ்செழுத் தாலே அமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத் தாலே அமர்ந்தபஞ் சாக்கரம்
அஞ்செழுத் தாகிய வக்கர சக்கரம்
அஞ்செழுத் துள்ளே அமர்ந்திருந் தானே. (934)

கூத்தனைக் காணுங் குறிபல பேசிடிற்
கூத்த னெழுத்தின் முதலெழுத் தோதினுர்
கூத்த னொடொன்றிய கொள்கைய ராய்நிற்பர்
கூத்தனைக் காணுங் குறியது வாமே.

(கு - ரை) கூத்தனெழுத்து - பஞ்சாக்ஷரம். முதல் எழுத்து சி. (935)

அத்திசைக் குள்நின்ற அனலை எழுப்பியே
அத்திசைக் குள்நின்ற தவ்வெழுத் தோதினல்
அத்திசைக் குள்நின்ற அந்த மறையனை
அத்திசைக் குள்ளுற வாக்கினன் தானே.

(கு - ரை) அத்திசை - சிம் என்று உச்சரித்தலால் பிராண வாயு செல்லுந்திசை (மூலம்). அவ்வெழுத்து - ஓங்காரம். அந்த மறையன் - மறையின் அந்தத்துள்ள சிவம். (936)

தானே யளித்திடுந் தையலை நோக்கினல்
தானே யளித்திட்டு மேலுற வைத்திடுந்
தானே யளித்த மகாரத்தை ஓதிடத்
தானே யளித்ததோர் கல்லொளி யாகுமே.

(கு - ரை) தையல் - குண்டலினி. கல்லொளி - மாணிக்க ஒளி. (937)

ஓமென் றெழுப்பித்தன் உத்தம நந்தியை
நாமென் றெழுப்பி நடுவெழு தீபத்தை
ஆமென் றெழுப்பியவ் வாறறி வார்கள்
மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே.

(கு - ரை) நடுவெழு தீபம் - சிகரம்; அநாகதத்துள்ள சிவம். நாம் என்று ஆம் என்று எழுப்பி - இந்தப் பீஜங்களை மாறி மாறிச் சொல்லி எழுப்பி. அவ்வாறு - சிவம் மந்திரமா யிருக்கும் வண்ணத்தை. மன்று - சிதம்பரம். (944)

பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்
வரந்தரு மந்திரம் வாய்த்திட வாங்கித்
துரந்திடு மந்திரஞ் சூழ்பகை போக
உரந்தரு மந்திரம் ஓமென் றெழுப்பே.

(கு - ரை) சூழ்பகை - பிறவிக்கேதுவாய இருவினைப் பகை. உரம் - ஞானம். (943)

ஆகின்ற சக்கரத் துள்ளே எழுத்தைந்தும்
பாகொன்றி நின்ற பதங்களில் வர்த்திக்கும்
ஆகின்ற ஐம்பத் தோரெழுத் துள்நிற்கப்
பாகொன்றி நிற்கும் பராபரன் தானே.

(கு - ரை) இம்மந்திரப்பாடல் முன்னர்க் (924) கூறப்பெற் றதை அகத்துப் பூசிக்கும் முறை கூறுகிறது. (945)

அவ்வியல் பாய இருமூன் றெழுத்தையும்
செவ்வியல் பாகச் சிறந்தனன் நந்தியும்
ஒவ்வியல் பாக ஒளியுற நோக்கிடிற்
பவ்வியல் பாகப் பரந்துநின் றானே.

(கு - ரை) இரு மூன்றெழுத்து - பிரணவமும் பஞ்சாக்கர மும். ஒஇயல்பு - பிரணவத்தின் வடிவாக. ஒவ்வு இயல்பு - சோகம் பாவனையிற் பொருந்திய இயல்பு என்றுமாம். ப. இயல்பு - பா இயல்பு. (942)

கல்லொளி யேயென நின்ற வடதிசை
கல்லொளி யேயென நின்றனன் இந்திரன்
கல்லொளி யேயென நின்ற சிகாரத்தைக்
கல்லொளி யேயெனக் காட்டிநின் றானே.

(கு - ரை) ஒளிகல் ஏயென - ஒளி பொருந்திய கைலாயம் எனவும் கூட்டியுரைப்பர்; கல் - பனிக்கட்டி. இந்திரன் - இந்திரி யத்தை வென்றவன். சிவன் கல் - வயிரம். கல் ஒளி - அசை யாத ஒளி. (938)

மறையவ னாக மதித்த பிறவி
மறையவ னாக மதித்திடக் காண்பர்
மறையவன் அஞ்செழுத் துண்ணிற்கப் பெற்ற
மறையவன் அஞ்செழுத் தாமது வாகுமே.

(கு - ரை) மறையவன் அஞ்செழுத்து - சிவபெருமானுடைய ஐந்தெழுத்து. (940)

ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சீயிரு தோள்வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற வச்சுட ர்வ்வியல் பாமே.

(கு - ரை) பாதங்கள் மகார நகாரங்கள். நாபியில் மகரம். சிகாரம் இருந்தோள். வகரம் வாய். அந் நவாய் - அந்த நகாரமாய் என்றும் பொருள் கொள்வர். (941)

பரமாய அஞ்செழுத் துள்நடு வாகப்
பரமா ய நவசிம பார்க்கில் மவயநசி
பரமாய சியநம வாம்பரத் தோதிற்
பரமாய வாசி மயநமாய் நின்றே.

(கு - ரை) அஞ்செழுத்துள் நடு - யகாரம். இதனை முதலாக வைத்து மாறுமுறை வருக்கின்றது. (946)

கொண்டஇச் சக்கரத் துள்ளே குணம்பல
கொண்டஇச் சக்கரத் துள்ளே குறியைந்து
கொண்டஇச் சக்கரங் கூத்தன் எழுத்தைந்துங்
கொண்டஇச் சக்கரத் துள்நின்ற கூத்தே.

(கு - ரை) குறி ஐந்து - மூலாதாரம் நீங்கலாகச் சுவாதிட்டான முதலிய ஆதாரங்கள் ஐந்தும். எழுத்தைந்து - ஆதாரசக்கர நடுவில் விளங்கும் எழுத்துக்கள் ஐந்து. (949)

வெளியி லிரேகை யிரேகையி லத்தலை
சுளியில் உகாரமாஞ் சுற்றிய வன்னி
நெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதம்
தெளியும் பிரகாரஞ் சிவமந்திரமே.

(கு - ரை) சுளி - குற்றம். (950)

அகார வுகார சிகார நடுவாய்
வகாரமோ டாறும் வளியுடன் கூடிச்
சிகார முடனே சிவன்சிந்தை செய்ய
ஒகார முதல்வன் உவந்து நின்றானே.

(கு - ரை) ஆறு என்றது பிரணவத்தோடு கூடிய ஐந்தெழுத்தினை. வளியுடன் கூடி - பிராணனைப் பிடிக்கு முறையுடன் கூடி. (951)

அவ்வென்ற போதினில் உவ்வெழுத் தாலித்தால்
உவ்வென்ற முத்தி யுருகிக் கலந்திடும்
மவ்வென்றென் னுள்ளே வழிபட்ட நந்தியை
எவ்வணஞ் சொல்லுகேன் எந்தை இயற்கையே.

(கு - ரை) ஆலித்தல் - ஒலித்தல். அகரம் இறைவனையும், உகரம் முத்தியையும் குறிக்கும். அகரமும் உகரமும் சேர்த்து ஒலிக்கும்போது உகரம் உருகி அகரத்தோடு கலக்க 'ஓ' ஆகும். அதனோடு மகரம் சேரில் பிரணவமாதல் காண்க. (953)

நீரில் எழுத்திவ் வுலக ரறிவது
வானில் எழுத்தொன்று கண்டறி வாரில்லை
யாரிவ் வெழுத்தை அறிவா ரவர்கள்
ஊனில் எழுத்தை உணர்கிலர் தாமே.

(கு - ரை) அறிவது - அறிவாகிய மாயையின் காரியங்கள். நீரில் எழுத்து - நீரில் எழுத்துப்போல நிலையற்றது. வானில் எழுத்து - பிரணவம். ஊன் - உடல். (954)

காலை நடுவுறக் காயத்தில் அக்கரம்
மாலை நடுவுற ஐம்பது மாவன
மேலை நடுவுற வேதம் விளம்பிய
மூலம் நடுவுற முத்திதந் தானே.

(கு - ரை) காலை நடு - மூலாதாரம். மாலை - வரிசை. கால் - பிராணவாயு. நடு - அநாகதம். காயம் - பரமாகாயம். அக்கரம் - பிரணவம். வேதம் விளம்பிய மூலம் - வேதகர்ப்பத்துள்ள சிவமூல மந்திரம். (955)

நாவியின் கீழது நல்ல எழுத்தொன்று
பாவிக ளத்தின் பயனறி வாரில்லை
ஓவிய ராலும் அறியவொண் ணாதது
தேவியுந் தானுந் திகழ்ந்திருந் தானே.

(கு - ரை) நாவி - கொப்பூழ். எழுத்து - பிரணவம். அத்தின் - அதன். ஓவியர் - பிரமனாதியர். (956)

அவ்வொடு சவ்வென்ற தானுற்ற மந்திரம்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிகிலர்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிந்தபின்
அவ்வொடு சவ்வும் அனாதியு மாமே.

(கு - ரை) அசபை. (957)

அருவினில் அம்பரம் அங்கெழு நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவி யகார சிகார நடுவாய்
உருவிட ஆறு முறுமந் திரமே.

(கு - ரை) அம்பரம் அங்கெழு நாதம் - பிரணவம். பெருகு துடியிடை - சத்தி. விந்து - வகாரம். மருவி யகாரம் சிகார நடுவாய் உருவிட - ஓம் வசிய என்று உருவேற்ற. (960)

ஆறெழுத் தோதும் அறிவார் அறிகிலர்
ஆறெழுத் தொன்றாக ஓதி உணரார்கள்
வேறெழுத் தின்றி விளம்பவல் லார்கட்கு
ஓரெழுத் தாலே உயிர்பெற லாமே.

(கு - ரை) வேறு எழுத்து - வைகரியான எழுத்து. ஆறு எழுத்து - பிரணவங்கூடிய பஞ்சாக்கரம். (962)

ஓதும் எழுத்தோ டுயிர்க்கலை மூவைஞ்சும்
ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்
சோதி எழுத்தினி லேயிரு மூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக்கொள் ளீரே.

(கு - ரை) ஓதும் எழுத்து - பிரணவம். உயிர்க்கலை பதினைந்து - உயிர் எழுத்துப் பதினைந்து. ஓதும் எழுத்து - அகரமுமாம் என்றும், உயிர்க்கலை பதினைந்து - அகரமுங்கூட உயிர் பதினாறு

மாம் என்றும் கூறுவர். சோதி - சிவம். இருமூன்று நிலையுள என மாறுக. (963)

விந்துவி லுஞ்சுழி நாதம் எழுந்திடப்
பந்தத் தலையிற் பதினாறு கலையதாக்
கந்தர வாகரங் காலுடம் பாயினுள்
அந்தமும் இன்றியே ஐம்பத்தொன் றாயதே. (964)

ஐம்ப தெழுத்தே அனைதது்மவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்
ஐம்ப தெழுத்தேயு மாவ தறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போய் அஞ்செழுத் தாமே.

(கு - ரை) எல்லாம் ஆயின ஐம்பதெழுத்துக்களே. அவற்றுட் சிறந்தன ஐந்தெழுத்துக்களே என்பதாம். (965)

அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கினன்
அஞ்செழுத் தாலே அமர்ந்துநின் றானே.

(கு - ரை) அஞ்செழுத்தால் அனைத்தையும் ஆக்கினன், காத்தனன் என்பதாம். (966)

உண்ணு மருந்தும் உலப்பிலி காலமும்
பண்ணுறு கேள்வியும் பாடலு மாய்நிற்கும்
விண்ணின் றமரர் விரும்பி அடிதொழ
எண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றானே.

(கு - ரை) மருந்து - அமுது. உலப்பிலி காலம் - வற்றாத காலம். (965)

ஐந்தின் பெருமையே அகலிட மாவதும்
ஐந்தின் பெருமையே ஆலய மாவதும்
ஐர்தின் பெருமையே யறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெயப் பாலனு மாமே.

(கு - ரை) வகை செய்ய - முறைப்படி செபிக்க. (969)

வேரெழுத் தாய்விண்ணாய் அப்புற மாய்நிற்கும்
நீரெழுத் தாய்நிலந் தாங்கியும் அங்குளன்
சீரெழுத் தாய்அங்கி யாயுயி ராமெழுத்
தோரெழுத் தீசனும் ஒண்சுட ராமே.

(கு - ரை) வேர் - ஓம். விண் - வ. நீர் - ம. நிலந்தாங்கி - ந. அங்கி - சி. உயிர் - ய. (970)

நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவிலவல் லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே.

(கு - ரை) நாலாம் எழுத்து - தூலபஞ்சாக்கரத்துள் நான் காவதாகிய வ. (971)

இயைந்தனள் ஏந்திழை என்னுள மேவி
நயந்தன ளங்கே நமசிவ என்னும்
பயந்தனை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனன் மற்றும் பிதற்றறுத் தேனே.

(கு - ரை) ஏந்திழை - திருவருட்சத்தி. பயம் - பயன். மற்றும் பிதற்று - வேறு மந்திரங்களைக் கூறும்பிதற்றல். (972)

ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினன்
ஓமத்திலேயுதம் பண்ணும் ஒருத்திதன்
நாம நமசிவ என்றிருப் பாருக்கு
நேமத் தலைவி நிலவிநின் றாளே.

(கு - ரை) ஆமம் - ஆமாசயம். ஓமம் - அக்கினி (ஜாடராக்கினி.) உதம்பண்ணும் - ஓமம் செய்யும். சக்தியே சாடராக்கினி வடிவாயிருந்து ஜீரணிப்பித்துச் சீவர்களைக் காக்கின்றாள் என்பதாம். (973)

பட்ட பரிசே பரமஞ் செழுத்ததின்
இட்ட மறிந்திட் டிரவு பகல்வர
நட்டம தாடு நடுவே நிலயங்கொண்
டட்டதே சப்பொரு ளாகிநின் றாளே.

(கு - ரை) இட்டம் - தியான உறைப்பு. நட்டம் - பஞ்சகிருத்திய தாண்டவம். அட்டதேசு - அஷ்ட தனுக்கள். (974)

அகாரம் உயிரே உகாரம் பரமே
மகார மல்மாய் வருமுப் பதத்திற்
சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமாய்
யகாரம் உயிரென் றறையலு மாமே.

(கு - ரை) உயிர் - ஆன்மதத்வங்கள். பரம் - சிவதத்துவம். மலம் - கலையாதி மாயாதத்துவங்கள். முப்பதத்தின் - அ உ ம என்னும் முப்பதத்தோடு- (975)

நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் வளியுடன் கூடி
ஓகார முதற்கொண் டொருக்கால் உரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே.

(கு - ரை) வளி - சீவனாகிய ய. மகாரமுதல்வன் - நாதத்திற்குத் தலைவனான சிவன். இங்ஙனம் நகாரத்தை முதலாக வைத்து ஓதுவது வேதமுறை. (976)

அஞ்சுள வானை அடவியுள் வாழ்வன
அஞ்சுக்கும் அஞ்செழுத் தங்குச மாவன
அஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட்கே
அஞ்சாதி யாதி அகம்புக லாமே.

(கு - ரை) ஆனை யென்றது புலன்களை. அடவி - தத்துவக் கூட்டமாகிய உடல். கூடத்து - யானை கட்டும் இடத்தில். அஞ்சாதி யாதி - திருவைந்தெழுத்தின் அதிபனாகிய சிவம். (977)

ஐந்து கலையில் அகராதி தன்னிலே
வந்த நகராதி மாற்றி மகராதி
நந்தியை மூலத்தே நாடிப் பரையொடுஞ்
சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே.

(கு - ரை) ஐந்துகலை - நிவிர்த்தி, பிரதிட்டை, வித்யை, சாந்தி, சாந்தியதீதை. அகராதி - அகார முதலிய வன்னங்கள். நகராதி மாற்றி - சிகார முதலாக. சந்தி - இரு சந்திகளிலும். சடங்கு - கன்மங்கள். (978)

மருவுஞ் சிவாயமே மன்னும் உயிரும்
அருமந்த போகமும் ஞானமு மாகுந்

தெருள்வந்த சீவனார் சென்றிவற் றாலே
அருள்தங்கி யச்சிவ மாவது வீடே.

(கு - ரை) ய சிவம் ஆவது வீடு. ஆன்மா சிவமாவது முத்தி. (979)

அஞ்சுக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்
நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சக மில்லை மனைக்கும் அழிவில்லை
தஞ்ச மிதுவென்று சாற்றுகின் றேனே.

(கு - ரை) அஞ்சு உக - ஐம் மலங்கள் கெட. (980)

சிவாயவொ டவ்வே தெளிந்துளத் தோதச்
சிவாயவொ டவ்வே சிவனுரு வாகும்
சிவாயவொ டவ்வுந் தெளியவல் லார்கள்
சிவாயவொ டவ்வே தெளிந்திருந் தாரே.

(கு - ரை) அவ்வே - அம்ச மந்திரம். (981)

சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஓகார முடனே ஒருகா லுரைக்க
மகார முதல்வன் மதித்து நின்றானே.

(கு - ரை) சிகாரத்தை முதலாகக் கூறும் ஆகமமுறை இம் மந்திரத்தால் அறிவிக்கப் பெறுகிறது. (982)

நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முத லாகுஞ் சதாசிவந் தானே.

(கு - ரை) கருமங்கள் - உலக காரியங்கள். நகார முதலான ஐந்தால் கருமங்கள் நாடும் எனவும், சிம்முதலுள்ளே அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை தெளியவல்லார்கட்கு எனவும் கூட்டுக. வல்வினை - பெருஞ்செயல்கள். (983)

நவமுஞ் சிவமும் உயிர்பர மாகுந்
தவமொன் றிலாதன தத்துவ மாகுஞ்
சிவமொன்றி யாய்பவ ராதர வால்அச்
சிவமென்ப தானும் எனுந்தெளி வுற்றதே.

(கு - ரை) நவம் - நகாரம் முதலியன (நமய.) சிவம் - சிகாராதியன ; (சி. வ.) உயிர் பரம் ஆகும் - சீவன் சிவனும். (984)

எட்டு வரையின்மே லெட்டு வரைகீறி
இட்ட நடுவுள் இறைவன் எழுத்தொன்றில்
வட்டத்தி லேயறை நாற்பத்தெட்டு மிட்டுச்
சிட்டஞ் செழுத்துஞ் செபிசீக் கிரமே.

(கு - ரை) இறைவன் எழுத்து - சிகாரம். (987)

பட்டன மாதவ மாறும் பராபரம்
விட்டனர் தம்மை விகிர்தா நமஎன்பர்
எட்டனை யாயினும் ஈசன் திறத்திறம்
ஒட்டுவன் பேசுவன் ஒன்றறி யேனே.

(கு - ரை) பட்டன - சிவ சக்கரம். அ - ஆறனுருபு. எட்டனையாயினும் - எள்ளளவும். (989)

புண்ணிய வானவர் பூமழை தூவிநின்
றெண்ணுவர் அண்ணல் இணையடி மந்திரம்
நண்ணுவர் நண்ணி நமஎன்று நாமத்தைக்
கண்ணென உன்னிக் கலந்துநின் றாரே.

(கு - ரை) இணை அடி மந்திரம் - சிவசத்தியாக இணைந்த மூல மந்திரம். கண்ணென உன்னி - (சிகாரம் இருகண்ணாதலின்) கண்ணாக எண்ணி ; "இருகண் சிகாரமாய்" (961) என்றதும் இங்கு நினைத்தற்குரியது. (993)

ஆறெழுத் தாவ தாறு சமயங்கள்
ஆறுக்கு நாலே இருபத்து நாலென்பர்
சாவித் திரியில் தலையெழுத் தொன்றுள
பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே.

(கு - ரை) சாவித்திரி - காயத்திரி. தலையெழுத்து - பிரணவம். (994)

எட்டினில் எட்டறை யிட்டோ ரறையிலே
கட்டிய ஒன்றெட்டாய்க் காண நிறையிட்டுச்
சுட்டி இவற்றைப் பிரணவஞ் சூழ்ந்திட்டு
மட்டும் உயிர்கட் குமாபதி யானுண்டே.

(கு - ரை) மட்டும் - தியானிக்கும். (995)

நம்முதல் அவ்வொடு நாவின ராகியே
அம்முத லாகிய எட்டிடை யுற்றிட்டு
உம்முத லாகவே யுணர்பவர் உச்சிமேல்
உம்முத லாயவன் உற்றுநின் றானே,

(கு - ரை) உம்முதலாக உணர்பவர் - சத்தி துணையாகக் கொண்டு அறிபவர். (996)

## தம்பனம்

நின்ற அரசம் பலகைமேல் நேராக
ஒன்றிட மவ்விட்டு ஓலையிற் சாதகந்
துன்று மெழுகையுள் பூசிச் சுடரிடைந்
தன்ற வெதுபமிடத் தம்பனங் காணுமே.

(கு - ரை) ம இட்டு - மகர முதலாக எழுத்தை மாறியெழுதி. அன்ற - வேகும்படி. (997)

## மோகனம்

கரண விரளிப் பலகை யமன்றிசை
மரணமிட் டெட்டின் மகார வெழுத்திட்டு
வரணமி லைங்காயம் பூசி யடுப்பிடை
முரணிற் புதைத்திட மோகன மாகுமே.

(கு - ரை) இரளிப்பலகை - கொன்றைப் பலகை. மரணம்- மாரக அக்கரம். வரணம் - மறைப்பு. ஐங்காயம் - ஐங்கருவாகிய கத்தூரி, புனுகு, சவ்வாது, கோரோசனை, தம்பலம் என்பனவாம்; ஒருவகைக் கருவுமாம். (998)

## வசியம்

ஏய்ந்த வரிதார மேட்டின்மே லேபூசி
ஏய்ந்த வகாரம் உகாரம் எழுத்திட்டு
வாய்ந்ததோர் வில்லம் பலகை வசியத்துக்
கேய்ந்தவைத் தெண்பதி னாயிரம் வேண்டிலே

(கு - ரை) அரிதாரம் - மஞ்சள். வில்லம் - வில்வம். (1001)

எண்ணாக் கருடனை ஏட்டின் யகாரமிட்
டெண்ணாப் பொன்னொளி எழுவெள்ளி பூசிடா
வெண்ணாவற் பலகையி லிட்டுமேற் கேநோக்கி
எண்ணா வெழுத்தொடெண் ணாயிரம் வேண்டிலே.

(கு - ரை) எண்ணுப் பொன்னுள் - வியாழன்; குறிப்பு மொழி. எழுவெள்ளி - வெண்ணிறமான பற்பம். (1002)

ஓங்கார முந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்
நீங்கா வகாரமும் நீள்கண்டத் தாயிடும்
பாங்கார் நகாரம் பயில்நெற்றி யுற்றிடும்
வீங்காகும் விந்துவும் நாதமே லாகுமே. (1012)

நமவது வாசன மான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமவற வாதி நாடுவ தன்றும்
சிவமாகு மாமோனஞ் சேர்தல்மெய் வீடே.

(கு - ரை) ஆசனம் - பீடம். (1013)

எடுக்கின்ற பாதங்கண் மூன்றெ தெழுத்தைக்
கடுத்த முகம்இரண் டாறுகண் ணகப்
படித்தெண்ணு நாவெழு கொம்பொரு நாலும்
அடுத்தெழு கண்ணனந் ததமி லாற்கே.

(கு - ரை) கடுத்த - ஒத்த. முகம் இரண்டு - சிவம் சக்திகளுடைய முகம். கண் - ஞானக்கண். எண்ணு - முன்னிலை யொருமைஏவல் முற்று. (1030)

## பிராணயாமம் சித்திக்கும் முறை

பேசிய மந்திரம் இகாரம் பிரித்துரை
கூசமி லாத சகாரத்தை முன்கொண்டு
வாசிப் பிராணன் உபதேச மாகைக்குக்
கூசிய விந்து வுடன்கொண்டு கூவே.

(கு - ரை) பிராணன் - பிராணயாமம். விந்து - மகாரம். சிம் என உச்சரி என்பதாம். (1095)

கூவிய சீவன் பிராணன் முதலாகப்
பாவிய சவ்வுடன் பண்ணும் மகாரத்தை
மேவிய மாயை விரிசங்கு முத்திரை
தேவி நடுவுள் திகழ்ந்துநின் றாளே.

(கு - ரை) சவ்வுடன் மகாரம் - சம். சங்க முத்திரை: இது தேவிக்குரிய முத்திரை. (1096)

இயைந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவி
நயந்தனள் அங்கே நமசிவ என்னும்
அயன்தனை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனள் மற்றும் பிதற்றறுத் தாளே.

(கு - ரை) அயன் - வேதம். ஓரும் - ஆராயும். (1115)

ஆமையொன் றேறி அகம்படி யானென
ஓமஎன் றோதியெம் உள்ளொளி யாய்நிற்கும்
தாம நறுங்குழல் தையலைக் கண்டபின்
சோம நறுமலர் சூடிநின் றாளே.

(கு - ரை) ஆமை ஒன்று - புலம் ஐந்தடக்கலாகிய ஒன்று. ஓம்+அ. (1206)

உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே
மணந்தெழு மாங்கதி யாகிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே.

(கு - ரை) மணந்து - வெளியாய். சூதன் சூதி - சிவம் சத்தி. கணந்து - கலந்து. (1222)

ஆமயன் மாலரன் ஈசன்மா லாங்கதி
ஓமய மாகிய ஒன்பதும் ஒன்றிடத்
தேமய னூந் தெனுதென என்றிடும்
மாமய மானது வந்தெய்த லாமே.

(கு - ரை) மால் ஆம்கதி - விரும்பும் பதவி. தேமயன் - இன்பவடிவன். (1241)

தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே
அளிந்து வகாரத்தை யந்நடு வாக்கிக்
குளிந்த வரவினைக் கூடியுள் வைத்து
வளிந்தவை யங்கெழு நாடிய காலே.

(கு - ரை) சக்கரம் - ஏரொளிச் சக்கரம். அளிந்து - கனிந்து. அகாரத்தை அந்நடுவாக்கி - அகாரத்தை அச்சக்கரத்திடையே இட்டு. குளிந்த அரவு - வட்டமாய பாம்பின் வடிவமான குண்டலினி. (1288)

கொண்டஇம் மந்திரங் கூத்தன் எழுத்ததாய்ப்
பண்டையுள் நாவிற் பகையற விண்டபின்
மன்றுள் நிறைந்த மணிவிளக் காயிடும்
இன்றும் இதயத் தெழுந்து நமவெனே.

(கு - ரை) கூத்தன் - சிகாரம். (1290)

ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்
வேறுரு வாக விளைந்து கிடந்தது
தேறி நிருமல சிவாய நமவென்று
கூறுமின் கூறிற் குறைகளும் இல்லையே.

(கு - ரை) ஆறு இருபத்து நால் அஞ்சு - முப்பத்தைந்து மெய்கள். " சிவாய நமவென்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை" யென்ற ஔவை வாக்கு இம்மந்திரத்தை உட் கொண்டு எழுந்ததே. ஐயும் அஞ்சும் வேறுருவாக விளைந்து கிடந்து எனக் கூட்டுக. ஐயும் அஞ்சும் - ஐயும் சிவாய நம என்பது. (1300)

ஆமே எழுத்தஞ்சு மாம்வழி யேயாகப்
போமே யதுதானும் போம்வழியே போனல்
நாமே நினைத்ததன் செயலு மாகும்
பார்மேல் ஒருவர் பகையில்லை தானே.

(கு - ரை) ஆம் வழி - நாதம் உற்பத்தியாம் மார்க்கம். போம் வழி - பிரமரந்திரம். (1303)

ஆரும் உரைசெய்ய லாமஞ் செழுத்தாலே
யாரும் அறியாத ஆனந்த ரூபமாம்
பாரும் விசும்பும் பகலும் மதியதி
ஊனும் உயிரும் உணர்வது வாமே.

(கு - ரை) அதியூன் - மேம்பட்ட சரீரம். உணர்வு அது : அது பகுதிப் பொருள் விகுதி. (1305)

உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே
அணைந்தெழு மாங்கத னாதிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாலே

(கு - ரை) அதன் ஆதி - அம்மந்திரத் தெய்வமாகிய சிவம். அணைந்தெழும் - வெளிப்படுவர். கணந்து - கலந்து. (1306)

*சௌமுதல் அவ்வொடு ஹௌவுட ஙைங்கிரீம்*
*கௌவு ளுமையுளுங் கலந்திரீம் சிரீமென்*
*றெவ்வில் எழுங்கிலீ மந்திர பாதமாச்*
*செவ்வுள் எழுந்து சிவாய நமவென்னே.*
(கு - ரை) செவ்வுள் - செவ்வையாக. (1320)

*ஒளியது ஹௌமுன் கிரீமது ஈருங்*
*களியது சக்கரங் கண்டறி வார்க்குத்*
*தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப்*
*பணிவது பஞ்சாக் கரமது வாமே.* (1349)

*மண்ணில் எழுந்த அகார உகாரங்கள்*
*விண்ணில் எழுந்து சிவாய நமவென்று*
*கண்ணில் எழுந்தது காண்பரி தன்றுகொல்*
*கண்ணில் எழுந்தது காட்சி தரஎன்றே*
(கு - ரை) மண் - மூலாதாரம். விண் - ஆஞ்ஞை. கண் - பிரமரந்திரம். கண் - நேத்திரம். (1406)

*இலிங்கநற் பீடம் இசையும் ஓங்காரம்*
*இலிங்கநற் கண்ட நிறையு மகாரம்*
*இலிங்கத்துள் வட்ட நிறையும் உகாரம்*
*இலிங்க மகார நிறைவிந்து நாதமே.*
(கு - ரை) சிவலிங்கத் திருமேனி வியஷ்டியும் சமஷ்டியுமாகிய பிரணவ வடிவம் என்பது. ~~(1725)~~ (1752)

*அகார முதலா யனைத்துமாய் நிற்கும்*
*உகார முதலா யுயிர்ப்பெய்தி நிற்கும்*
*அகார வுகாரம் இரண்டு மறியில்*
*அகார வுகாரம் இலிங்கம தாமே.*
(கு - ரை) அகாரம் - சிவம். முதலாய் - எல்லாவற்றிற்கும் முதலாய். உகாரம் - சத்தி. இரண்டுங்கூடில் எல்லாம் உயிர்ப்பு எய்தும் என்பதாம். (1753)

*உச்சியுங் காலையும் மாலையும் ஈசனை*
*நச்சுமி னச்சி நமவென்று நாமத்தை*
*விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்*
*நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே.*
(கு - ரை) விச்சுமின் - புகழ்மின். (1850)

சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி
ஆக்கிய தூல மளவாக்கி அதீதத்துத்
தாக்கிய வன்பான தாண்டவஞ் சார்ந்தது
தேக்குஞ் சிவமாதல் ஐந்துஞ் சிவாயமே.

(கு - ரை) ஆதித்தலையாக்கி - முதற்கொண்டு. தூலம் - தூல உடல். அதீதத்து - துரியாதீதத்து. சிவமாதல் ஐந்தும் - சிவதத்வம் ஐந்தும். (2186)

ஆரூ றகன்று நமவிட் டறிவாகி
வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈறார் பரையின் இருளற்ற தற்பரன்
பேறார் சிவாய அடங்கும்பின் முத்தியே.

(கு - ரை) ஆரூறு - முப்பத்தாறு தத்துவங்கள். நமவிட்டு - நகார மகாரங்களை நீக்கி. தான் - ஆன்மா. (2291)

காமம் வெகுளி மயக்க மிவைகடிந்
தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனும் ஓசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறே.

(கு - ரை) ஏமம் - சிவானந்தம். எறிமணி - அடிக்கும் மணி. தாமம் - ஒளி (சிவம்) (2436)

ஆரூறு நீங்க நமவாதி யகன்றிட்டு
வேறா கியபரை யாவென்று மெய்ப்பரன்
ஈறான வாசியிற் கூட்டு மதுவன்றோ
தேறுச் சிவாய நமவெனத் தேறிலே.

(கு - ரை) சிவாயநம வெனத் தேறில் வகாரமாகிய பரை முப்பத்தாறு நீங்க நம அகன்ற பசு என்று பரனை சிகாரத்திற் கூட்டும் என்க. (2499)

அகாரம் உயிரே யுகாரம் பரமே
மகாரஞ் சிவமாய் வருமுப் பதத்துச்
சிகாரஞ் சிவமே வகாரம் பரமே
யகாரம் உயிரென் றறையலு மாமே.

(கு - ரை) இம் மந்திரம் பிரணவப் பொருளும், பஞ்சாக்கரப் பொருளும் கூறுகிறது. (2503)

ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே. (2676)

ஓங்காரத் துள்ளே யுதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே.

(கு - ரை) உயிர் மூன்று - சகலர், பிரளயாகலர், விஞ்ஞான கலர். (2677)

ஐம்ப தெழுத்தே யனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே யனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தின் அடைவை யறிந்தபின்
ஐம்ப தெழுத்தே அஞ்செழுத் தாமே.

(கு - ரை) அடைவு - முறை. (2698)

அகார முதலாக ஐம்பத்தொன் றாகி
உகார முதலாக வோங்கி யுதித்து
மகார இறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகும் நந்திதன் நாமமே. (2699)

அகராதி யீரெண் கலந்த பரையும்
உகராதி தன்சத்தி யுள்ளொளி யீசன்
சிகராதி தான்சிவ வேதமே கோண
நகராதி தான்மூல மந்திர நண்ணுமே.

(கு - ரை) அகராதி யீர்எண் - அகார முதலிய உயிர் பதினாறு. உகராதி - உ, அ, ம் என்ற மூன்றும். சிகராதி - சிவாய. சிவ வேதம் - சிவ மந்திரம். கோணம் - பிராணன். நகராதி - நம. (2700)

வாயொடு கண்டம் இதய மருவுந்தி
ஆய இலிங்க மவற்றின்மே லேயவ்வாய்த்
தூயதோர் துண்ட மிருமத் தகஞ்செல்லல்
ஆயதீ ரைமைந்தோ டாமெழுத் தஞ்சுமே.

(கு - ரை) அஞ்செழுத்தும் வாய், கண்டம், இதயம், உந்தி, இலிங்கம், மூலம் என ஆறு ஆதாரங்களிலும் பொருந்தி வெளிப் படும் என்பது. அவற்றுள் வாய் என்பது கண்டத்து மேல் மத்தகம் வரை செல்வது. (2701)

கிரணங்கள் ஏழுங் கிளர்ந்தெரி பொங்கிக்
கரணங்கள் விட்டுயிர் தானெழும் போது
மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போதும்
அரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே.

(கு - ரை) மரணம் - மரணத்தைச் செய்விக்கும் யமன். அரணம் - பாதுகாப்பு. (2702)

ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
ஆயுறு மந்திர மாரும் அறிகிலார்
சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
வாயுற வோதி வழுத்தலு மாமே.

(கு - ரை) ஞாயிறு திங்கள் - பிங்கலை இடைகலை நாடிகள். ஆயுறு மந்திரம் - தியானிக்கத் தக்க மந்திரம். சேயுறு கண்ணி - செவ்வரி பரந்த கண்களையுடைய நாத சக்தி. (2703)

தெள்ளமு தூறச் சிவாய நமவென்
றுள்ளமு தூற வொருகால் உரைத்திடும்
வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே.

(கு - ரை) உள் அமுதூற - இதயத்து இன்பம் பெருக. உரைத்திடும் - சொல்லும்; செய்யுமென் ஏவல்முற்று. வெள் ளமுது - வெண்மையாகிய அமுதம். துள்ளிய - துளிகளாலாகிய. (2704)

குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே.

(கு - ரை) குருவழியாய குணங்கள் - குருபரம்பரையில் உபதேசிக்கப் பெற்றுவந்த சாதனங்கள். கரு வழியாய கணக்கு - பிறவிக்கு ஏதுவாய வழி. (2705)

எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவென்னும்
குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே.

(கு - ரை) வாது - இரசவாதம். குளிகை - இரசகுளிகை. கூடு - உடல். (2709)

ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டவ்
வாதி தனைவிட் டிறையருட் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதுஞ் சிவாய மலமற்ற உண்மையே.

(கு - ரை) நமலம் எல்லாம் - மல அக்கரங்களாகிய நகார மகாரங்கள் எல்லாம். அவ்வாதிதனை விட்டு - ஔமுதலான பீஜங்களை விட்டு. அருட்சத்தியால் சிவாய ஓதும். யோகம் சித்திக்கும் எனக் கூட்டிப் பொருள் காண்க. (2712)

அருடரு மாயமும் அத்தனுந் தம்மில்
ஒருவனை யீன்றவர் உள்ளுறு மாயை
திரிமல நீங்கிச் சிவாயவென் றோதும்
அருவினை தீர்ப்பதும் அவ்வெழுத் தாமே.

(கு - ரை) அருள் தரு மாயம் - அருள் வழங்கும் மோகினி. ஒருவன் - சாத்தன் (சாஸ்தா.) நீங்கி - நீங்க எனத்திரிக்க. (2714)

சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகுந் திருவரு ளாமே.

(கு - ரை) வாயு - பிராணவாயு. (2715)

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே. (2716)

நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவவென்னு நாமத்தைச் சிந்தையு ளேற்றப்

பவமது தீரும் பரிசும தற்றல்
அவமதி தீரும் அறும்பிறப் பன்றே.

(கு - ரை) பவம் - பாவம். அவமதி - அஞ்ஞானம். (2717)

சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய் தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே.

(கு - ரை) அவாயம் - அபாயம். (2718)

ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்
மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்
சேய்நின்ற செஞ்சுடர் எம்பெரு மானடி
ஆய்நின்ற தேவர் அகம்படி யாமே.

(கு - ரை) சேய்நின்ற - காணங்கட்கு எட்டாது நின்ற. அகம்படி - மனத்தின் தன்மை. (2824)

உரையற்ற ஆனந்த மோன சொரூபத்தன்
கரையற்ற சத்தியாதி காணில் அகார
மருவுற் றுகார மகாரம தாக
உரையற்ற தாரத்தில் உள்ளொளி யாமே.

(கு - ரை) தாரம் - தாரக மந்திரமாகிய பிரணவம். (2844)

சூழுங் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை
ஏழும் இரண்டிலும் ஈசன் பிறப்பிலி
ஆழுஞ் சுனையும் அடவியும் அங்குளன்
வாழும் எழுத்தைந்து மன்னனு மாமே.

(கு - ரை) கருங்கடல் என்றது கடற் பொதுமை பற்றி. ஏழும் இரண்டிலும் - பதினான்கு உலகங்களிலும். ஆழும் சுனையும் அடவியும் - ஆழ்ந்த நீர்ச்சுனைகளும், காடும் சூழ்ந்த கயிலாயத்து. (3000)

ஒன்றுகண் டேனிவ் வுலகுக் கொருகனி
நன்றுகண் டாயது நமச்சிவா யக்கனி
மென்றுகண் டாலது மெத்தென் றிருக்கும்
தின்றுகண் டாலது தித்திக்குந் தானே.

நாயோட்டு மந்திரம் நான்மறை வேத
நாயோட்டு மந்திரம் நாத னிருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நாயோட்டு மந்திரம் நாமறி யோமே.

(கு - ரை) நாயோட்டு மந்திரம் - சி.

ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினள்
ஓமத்தி லேயும் ஒருத்தி பொருந்தினள்
நாம நமசிவ என்றிருப் பார்க்கு
நேமத் துணைவி நிலாவிநின் றுளே. (1213)

---

# பதினோராந் திருமுறை

## காரைக்காலம்மையார். திரு இரட்டைமணி மாலை

தலையாய ஐந்தினையுஞ் சாதித்துத் தாழ்ந்து
தலையா யினவுணர்ந்தோர் காண்பர் - தலையாய
அண்டத்தான் ஆதிரையான் ஆலாலம் உண்டிருண்ட
கண்டத்தான் செம்பொற் கழல்.

(கு - ரை) தலையாய ஐந்து - மந்திரங்களுள் சிறந்த ஐந்தெழுத்து. சாதித்து - பதியும்வரை பழகி. தாழ்ந்து - மலகன்மங்களின் வலி தாழப்பெற்று. உணர்ந்தோர் கழல் காண்பர் எனக் கூட்டுக. (10)

## சேரமான் பெருமாள் நாயனர். பொன்வண்ணத் தந்தாதி

முனியே முருகலர் கொன்றையி னாய்என்னை மூப்பொழித்த
கனியே கழலடி யல்லாற் களைகண்மற் றென்றுமிலேன்
இனியேல் இருந்தவஞ் செய்யேன் திருந்தஅஞ் சேநினைந்து
தனியேன் படுகின்ற சங்கடம் ஆர்க்கினிச் சாற்றுவனே.

(கு - ரை) முனி - மனனசீலர். களைகண் - பற்றுக்கோடு. அஞ்சே திருந்த நினைந்து இனி இருந்தவம் செய்யேன் - ஐந்தெழுத்தைத் திருந்த எண்ணியதால் வேறுதவம் செய்யேன். (40)

## நக்கீர தேவநாயனர். கைலைபாதி காளத்திபாதி அந்தாதி

வாயிலே வைக்கு மளவின் மருந்தாகித்
தீய பிறவிநோய் தீர்க்குமே - தூயவே
கம்பெருமா தேவியொடு மன்னு கயிலாயத்
தெம்பெருமான் ஓரஞ் செழுத்து.

(கு - ரை) வைத்தல் - செபித்தல். வைக்கும் அளவில் என்றது விரைவுபற்றி. தீய பிறவிநோய் - இம்மருந்திற் கன்றி எம்மருந்திற்கும் ஏகாத நோய். ஏகம்பெருமா தேவி - ஒப்பற்ற பெரிய நாயகி; 'யாவையுமாமேகம் - பராசத்தி' (சிற். 71, பேர்.) (39)

அஞ்செழுத்துங் கண்டீர் அருமறைக ளாவனவும்
அஞ்செழுத்துங் கற்க அணித்தாகும் - நஞ்சவித்த
காளத்தியார் யார்க்குங் காண்டற் கரிதாய்ப்போய்
நீளத்தே நின்ற நெறி.

(கு - ரை) கண்டீர் : முன்னிலை யசைச்சொல். நஞ்சவித்த காளத்தியார் - சிவபெருமான். நெறி கற்க அணித்தாகும் என்க. (40)

மற்றும் பலபிதற்ற வேண்டா மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி—நெற்றிக்கண்
ஆரா அமுதின் திருநாமம் அஞ்செழுத்தும்
சோராமல் எப்பொழுதுஞ் சொல்

(கு - ரை) நெஞ்சே சொல் என்றமையால் வாயாற் சொல்லல் அத்துணைப் பயனின்று என்பதாம். சோராமல் - மறவாமல். (100)

## பரணதேவ நாயனர். சிவபெருமான் திருவந்தாதி

பார்த்துப் பரியாதே பால்நீறு பூசாதே
பார்த்துப் பரிந்தங்கம் பூணதே—பார்த்திட்
டுடையான் அஞ் சோதாதே ஊனுரைக் கைவிட்
டுடையான்அஞ் சோதாதார் ஊண்.

(கு - ரை) பால்நீறு - பால்போலும் வெள்ளிய திருநீறு. பரிந்து - விரும்பி. அங்கம் - சாதனம். உடையான் அஞ்சு - பஞ்சப் பிரம மந்திரங்கள். ஊனுரைக் கைவிட்டு - உடற் பற்றை

யொழித்து. ஊண் பார்த்துப் பரியாதே - உணவைக்கண்டு விரும்பாதே. திருநீறு, கண்டிகை, பஞ்சாக்கரம் ஆகிய சைவ ஒழுக்கமில்லாதார் உணவும் விரும்பத்தக்கதன்று என்பது கருத்து. இது விற் பூட்டு. (29)

உறுமுந்த முன்னே யுடையாமல் இன்னம்
உறுமுந்த முன்னே யுடையாமல்—உறுமுந்தம்
ஓரைந் துரைத்துற் றுணர்வோ டிருந்தொன்றை
ஓரைந் துரைக்கவல்லார்க் கொன்று.

(கு - ரை) உறு - துன்பம்; ஊறு என்பதன் விகாரம். இது பிராரத்தம். முந்த முன்னே - முற்பட அதன் முன். உடையாமல் - வருந்தாதபடி. இன்னம் உறும் உந்த முன்னே - மேலும் வருகின்ற (ஆகாமியம்) வினையும் உங்களைச் செலுத்து முன்னே. உடையாமல் - கெடாமல். உந்தம் ஓர் ஐந்து - உங்களுடைய புலன்கள் ஐந்தையும். உரைத்து - கெடுத்து. ஒன்றை - சிவத்தை. ஐந்து - திருவைந்தெழுத்து. ஒன்று - வீடு. ஒன்று உறும் எனக் கூட்டுக. (100)

## பட்டணத்துப்பிள்ளையார். கோயில் நான்மணி மாலை

வழிவழி வந்த மரபினம் மொழிவதுன்
ஐந்தெழுத் தவையெஞ் சிந்தையிற் கிடத்தி.

(கு - ரை) கிடத்தி அகலாது இருக்கச் செய்து. (24)

## பட்டணத்துப்பிள்ளையார் திருக்கழுமல மும்மணிக்கோவை

நந்தாச் சோதிநின் அஞ்செழுத்து நவிலுந்
தந்திரம் பயின்றதும் இலனே.

(கு - ரை) தந்திரம் - முறை யுணர்த்து நூல். (7)

வீற்றினி திருக்க ஏற்றமெய்ப் பிரணவத்
தோணியே பற்றெனத் துணிந்து
காணுறும் அறிவொடு கண்டுகொண் டேனே.

(கு - ரை) பிரணவத் தோணி: சீகாழியில் அம்மையப்பர் வீற்றிருப்பது. காணுறும் அறிவு - பிரணவம் சிவம் சத்தியின் கூட்டாய் இருத்தலை யறியும் அறிவு. (16)

*கூறுஞ் செனனக் குடினெடு நாணுமை கூன்முழுதும்*
*மாறும் படிக்கு மருந்துளதோ சண்பை வாணர்கொண்ட*
*நீறுந் திருவெழுத் தோரைந்துங் கண்டியும் நித்தநித்தம்*
*தேறும் பொருளென் றுணராத மாயச் செருக்கினர்க்கே.*

(கு - ரை) செனனக்குடில் - பிறவிக்குடிசை. கூன் - வினைக் கோணல். சண்பை வாணர் - சீகாழியில் எழுந்தருளிய சிவபெருமான். (21)

## பட்டணத்துப் பிள்ளையார் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

*கண்ணீர் அரும்பிக் கடிமலர் மலர்ந்து புண்ணிய*
*அஞ்செழுத் தருங்காய் தோன்றி.*

(கு - ரை) கடிமலர் - மணம் பொருந்திய உள்ளத்தாமரை. (10)

*காணீர் கதியொன் றுங் கல்லீர் எழுத்தஞ்சும் வல்லவண்ணம்*
*பேணீர் திருப்பணி பேசீர் அவன்புகழ் ஆசைப்பட்டுப்*
*பூணீர் உருத்திர சாதனம் நீறெங்கும் பூசுகிலீர்*
*வீணீர் எளிதோ மருதப் பிரான்கழல் மேவுதற்கே.*

(கு - ரை) மேவுதற்குக் கதி காணீர், கல்லீர், பேணீர், பூணீர் என முறையே கூட்டுக. வீணீர் - வீணர்களே ! (12)

*ஓராதே அஞ்செழுத்தும் உன்னாதே பச்சிலையும்*
*நேராதே நீரும் நிரப்பாதே - யாராயோ*
*எண்ணுவார் உள்ளத் திடைமருதர் பொற்பாதம்*
*நண்ணுவாம் என்னுமது நாம்*

(கு - ரை) நேர்தல் - சாத்துதல். என்னுமது ஓராதே (யாகும்) எனக்கூட்டுக. (14)

*மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது*
*சிந்தை நின்வழி செலுத்தலின்.*

(கு - ரை) மானத செபமும் வாசிக செபமும் ஒருவழி நிகழ வேண்டும் என்பதாம். (19)

## நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதி

*பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயில் நாவினன்சீர்*
*மதியஞ் சடையாற் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து*

துதிஅங் கழற்சண்பை நாதற்குத் தோழன்வன் தொண்டன்
அம்பொன்
அதிகம் பெறுபுக லூர்முரு கன்எனும் அந்தணனே.

(கு - ரை) திருப்புகலூரில் முருக நாயனார் என்னும் அந்தணப் பெரியார் இறைவர்க்கு மாலைத்தொண்டியற்றினர் என்பதும் ஞான சம்பந்தப் பெருமானுக்குத் தோழர் என்பதும் அறிவிக்கப் பெறு கின்றன. சண்பை நாதன் - சம்பந்தப் பெருமான். (18)

சூதப் பொழில்அம்பர் அந்தணன் சோமாசி மாறன் என்பான்
வேதப் பொருள்அஞ் செழுத்தும் விளம்பியல்லான் மொழி
யான்
நீதிப் பரன்மன்னு நித்த நியமன், பரவை யென்னும்,
மாதுக்குக் காந்தன்வன் தொண்டன் தனக்கு மகிழ்துணையே.

(கு - ரை) சூதம் - மாமரம். வேதப்பொருள் அஞ்செழுத்து - வேதத்திலேயே பொருளாகவுள்ள ஐந்தெழுத்து. (39)

## நம்பியாண்டார் நம்பி ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி

கண்ணார் திருநுத லோன்கோலக் காவிற் கரநொடியாற்
பண்ணார் தரப்பாடு சண்பையர் கோன்பாணி நொந்திடுமென்
றெண்ண எழுத்தஞ்சும் இட்டபொற் றாளங்கள் ஈயக்கண்டு
மண்ணார் சிலர்சண்பை நாதனை ஏத்தார் வருந்துவதே.

(கு - ரை) கரநொடி - கைத்தாளம். பண் ஆர்தர - இசை நிரம்ப. பாணி - கை. சண்பை நாதன் - காழிக்கவுணிய சம்பந்தப் பெருமான். (82)

---

# பெரிய புராணம்

## திருநாட்டுச் சிறப்பு

வீதிகள் விழவின் ஆர்ப்பும் விரும்பினர் விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா தனயரும் அ(ன்)னையில் தப்பா
நீதிய புள்ளும் மாவும் நிலத்திருப்பு (உ)ள்ளு மாவும்
ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தாம் அஞ்சும்.

(கு - ரை) ஆர்ப்பு - ஒலி. நெறியில் தப்பா - தத்தமக்கு விதிக்கப்பெற்ற வழிகளில் ஒழுகும். தனயர் - மக்களும். இல் -

வீடுகள். மாவும் - இலக்குமியும். நிலத்திருப்பு உள்ளும் - நிலவுலகத்திலேயே என்றும் நிலவலாம் என்று எண்ணும். ஓதிய - ஓத. உறுபிணி - வரக்கடவ வினையாகிய ஆகாமியம். (34)

## தடுத்தாட்கொண்ட புராணம்

தேடிய அயனும் மாலும் தெளிவுறு ஐந்தெ ழுத்தும்
பாடிய பொருளாய் உள்ளான் பாடுவாய் நம்மை என்ன
நாடிய மனத்த ராகி நம்பியா ரூரர் மன்றுள்
ஆடிய செய்ய தாளை அஞ்சலி கூப்பி நின்று.

(கு - ரை) பாடிய - சொன்ன. நம்பியாரூரர் - சுந்தரர் பெருமான். அஞ்செழுத்தின் பொருள் ஆனந்தக்கூத்தன். (71)

பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளமும்
வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்பரன்
அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்.

(கு - ரை) உணர்தல் - அறிந்து நேயத்தழுந்தல். வல்வினை - மேலும் வினையை வளர்க்கும் வினை. (159)

## ஆனாய நாயனார் புராணம்

எடுத்தகுழற் கருவியினில் எம்பிரான் எழுத்தஞ்சும்
தொடுத்தமுறை ஏழிசையின் சுருதிபெற வாசித்துத்
தடுத்தசரா சரங்களெலாம் தங்கவரும் தங்கருணை
அடுத்தஇசை அமுதளித்துச் செல்கின்றார் அங்கொருநாள்.

(கு - ரை) கருணை யடுத்த இசை - எல்லாவுயிர்க்கும் பயன் தருவதாக என்னும் கருணை பொருந்திய இசை. (14)

அன்பூறி மிசைப்பொங்கும் அமுதஇசைக் குழலொலியால்
வன்பூதப் படையாளி எழுத்தைந்தும் வழுத்தித்தாம்
முன்பூதி வருமளவின் முறைமையே எவ்வுயிரும்
என்பூடு கரைந்துருக்கும் இன்னிசைவேய்ங் கருவிகளில்.

(கு - ரை) பூதப் படையாளி - சிவபெருமான். வன்பூதம் என்றருளினார்கள், " ஆளும் பூதங்கள் பாட நின்றாடும்" என்று தேவாரங் கூறுதலின். அன்றியும் " வேண்டிடின், நாடும் ஐம்பெரும் பூதங்கள் நாட்டுவ " ஆதலின். (22)

## அமர்நீதி நாயனார் புராணம்

*இழைத்த அன்பினில் இறைதிரு நீற்றுமெய் யடிமை*
*பிழைத்தி லோம்எனிற் பெருந்துலை நேர்நிற்க என்று*
*மழைத்த டம்பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்*
*தழைத்த அஞ்செழுத் தோதினார் ஏறினார் தட்டில்.*

(கு - ரை) இழைத்த அன்பினில் - அன்பு இழைக்கப் பெற்றதால். பெருந்துலை - தம்பொருளெல்லாம் தந்தும் இடம் விஞ்சி நின்ற தராசு. தழைத்த அஞ்செழுத்து - அன்பு தழைத்தற்குக் காரணமும் பயனுமான அஞ்செழுத்து. (43)

## ஆனாய நாயனார் புராணம்

*மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி*
*ஏறியதா ரமும்உழையும் கிழமைகொள இடுந்தானம்*
*ஆறுலவும் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசைபெருகக்*
*கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினில் நிறுத்தி.*

(கு - ரை) மாறு முதற்பண் - சுரங்கள் மாறி வருகின்ற குறிஞ்சிப்பண். தாரம் - உச்ச விசை. தாரமும் உழையுங்கிழமை கொண்டால் பாலையாழாகும். பட்டடை - நரம்புகளில் இளி. என்னை "எல்லாப் பண்ணிற்கும் அடிமணையாதலின்" (சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லாருரை.) கொடிப்பாலை—'இளிகுரலாயது கொடிப்பாலை' (25)

*ஆயஇசைப் புகல்நான்கின் அமைந்தபுகல் வகையெடுத்து*
*மேயதுளை பற்றுவன விடுப்பனவாம் விரல்நிரையிற்*
*சேயவொளி யிடையலையத் திருவாளன் எழுத்தஞ்சும்*
*தூயஇசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார்.*

(கு - ரை) இசைப்புகல் நான்கு - பண், பண்ணியல், திறம், திறத்திறம். திருவாளன் - மெய்த்திரு ஆள்பவன்; சிவபெருமான். இசைக் கிளை கொள்ளுந் துறையைந்து - ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சாரம், இடாயம் என்பன. (26)

*வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்*
*உள்ளுறைஅஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி*
*வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்*
*தெள்ளமுதின் உடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க.*

(கு - ரை) வள்ளலார் - புலவின்பம் பயக்கும் வேய்ங்குழல் வழியாகப் பேரின்பம் பயக்கும் அஞ்செழுத்தை அகத்து அழுத்துபவர். ஒழுகி யெழூம் - முயற்சியின்றியே இயற்கையின் எழும். (29)

திசைமுழுதுங் கணநாதர் தேவர்கட்கு முன்னெருங்கி
மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே
அசையஎழுங் குழல்நாதத் தஞ்செழுத்தால் தமைப்பரவும்
இசைவிரும்பும் கூத்தனார் எழுந்தருளி எதிர்நின்றார்.

(கு - ரை) மிசை - மேல். வேற்றொலி - வேறு வாச்சியங்களின் ஒலி. (39)

## முருக நாயனார் புராணம்

ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களின் அமைத்துத்
தாங்கிக் கொடுசென் றன்பினொடுஞ் சாத்தி வாய்ந்த அர்ச்சனைகள்
பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார் பரமர் பதிகப் பற்றான
ஓங்கிச் சிறந்த அஞ்செழுத்தும் ஓவா நாவின் உணர்வினார்.

(கு - ரை) அப்பணி - அந்தப் பூத்திருத்தொண்டு. அமைத்த - தக்க. பதிகப்பற்றான...அஞ்செழுத்து - திருமுறைகளின் உள்ளுறையாகிய அஞ்செழுத்து. (10)

அன்ன வடிவும் ஏனமுமாய் அறிவான் இருவர் அறியாமல்
மன்னும் புகலூர் உறைவாரை வர்த்த மான வீச்சுரத்து
நன்னர் மகிழ்ச்சி மனங்கொள்ள நாளும் பூசை வழுவாமே
பன்னும் பெருமை அஞ்செழுத்தும் பயின்றே பணிந்து பரவினார்.

(கு - ரை) ஏனம் - பன்றி. இருவர் - பிரமனும், திருமாலும். வர்த்தமானேச்சுரம் - திருப்புகலூர்த் திருக்கோயிலில் அக்கினிபுரீசப்பெருமானுக்கு வலப்பக்கத்திலுள்ளே அமைந்த பாடல்பெற்ற சிவஸ்தலம். (12)

## திருக்குறிப்புத் தொண்ட நாயனர் புராணம்

நெஞ்சம் ஈசனைக் காண்பதே விரும்பி
நிரந்த ரந்திரு வாக்கினில் நிகழ்வ
தஞ்செ ழுத்துமே ஆகஆ ளுடைய
அம்மை செம்மலர்க் கைகுவித் தருளித்
தஞ்ச மாகிய அருந்தவம் புரியத்
தரிப்ப ரேஅவள் தனிப்பெருங் கணவர்
வஞ்ச நீக்கிய மாவின்மூ லத்தில்
வந்து தோன்றினர் மலைமகள் காண.

(கு - ரை) நிரந்தரம் - இடைவிடாது. தஞ்சம் - ஆதரவு. வஞ்சம் - குற்றம். (57)

## சண்டேசுர நாயனர் புராணம்

பண்ணின் பயனும் நல்லிசையும்
பாலின் பயனும் இன்சுவையும்
கண்ணின் பயனும் பெருகொளியும்
கருத்தின் பயனும் எழுத்தஞ்சும்
விண்ணின் பயனும் பொழிமழையும்
வேதப் பயனும் சைவமும்போல்
மண்ணின் பயனும் அப்பதியின்
வளத்தின் பெருமை வரம்புடைத்தோ.

(கு - ரை) இசை புகழுக்கும் இசைக்கும் பெயராதலின் இறைவன் புகழை இசைக்கும் பொருட்டொடர்புடையது என்ப தாம். கருத்தின்பயனும் அஞ்செழுத்து - மக்கள் கருத்துப் படைத்ததன் பயனை அஞ்செழுத்து. (9)

## திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்

அப்பரி சவ்வினை முற்றி அவரகன் றேகிய பின்னர்
ஒப்பரும் ஆழ்கடல் புக்க உறைப்புடை மெய்த்தொண்டர்
தாமும்
எப்பரி சாயினும் ஆக ஏத்துவன் எந்தையை என்று
செப்பிய வண்டமிழ் தன்னல் சிவன்அஞ் செழுத்துந்
துதிப்பார்.

(கு - ரை) முற்றி - முடித்து. அவர் - (கல்விடைக்கட்டிக் கடலிலிட்ட) அமணர். உறைப்பு - துன்பினும் இன்பினும் பிற மாது நிற்றல். "திருத்தொண்டின் உறைப்பாலே" என்பார்கள் பின்னும். (125)

சொற்றுணை வேதியன் என்னுந் தூமொழி
நற்றமிழ் மாலையா நமச்சி வாயஎன்
றற்றமுன் காக்கும்அஞ் செழுத்தை அன்பொடு
பற்றிய உணர்விஞல் பதிகம் பாடினுர்.

(கு - ரை) அற்றம் - சோர்வு. "அறிவற்றம் காக்கும் கருவி" என்பது போல. அற்றமுன்காக்கும் ஐந்தெழுத்து - ஆன்மா வாதனையாற் பாசத்தை நோக்கி நிற்கும் சோர்வைக் காக்கும் எழுத்து. (126)

பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முதல் அமரர் வாழ்த்துதற்
கரியஅஞ் செழுத்தையும் அரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுள் கல்மி தந்ததே.

(கு - ரை) மலரோன் - பிரமன். (127)

இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ.

(கு - ரை) இருவினைகளும் ஆன்மாவைக் கட்டிப் பிறவிக் கடலில் தள்ளுதலின் பாசமாக உருவகிக்கப் பெற்றன. மலம் - ஆணவம். மாக்களைக் கருக்கடல் ஏற்றும் அஞ்செழுத்து அரசைக் கருங்கடல் நின்று ஏற்றியது ஒரு வியப்பன்று என்பதாம். (129)

ஏற்றி னுர்அருள் தலைமிசைக் கொண்டெழுந் திறைஞ்சி
வேற்று மாகிவிண் ணுகி நின் றுர்மொழி விரும்பி
ஆற்றல் பெற்றவர் அண்ணலார் அஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையில் மூழ்கினுர் பணியால்.

(கு - ரை) ஏற்றினுர் - இடபவாகனத்தையுடைய இறைவன் பால் - பக்கம்; வெண்மையுமாம். (370)

## பெருமிழலைக் குறும்ப நாயனார் புராணம்

நாளும் நம்பி யாரூரர்
நாமம் நவின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி
சித்தி யான அணைந்ததற்பின்
மூளும் காத லுடன்பெருக
முதல்வர் நாமத் தஞ்செழுத்தும்
கேளும் பொருளும் உணர்வுமாம்
பரிசு வாய்ப்பக் கெழுமினார்.

(கு - ரை) மூளும் - மேன்மேல் வளர்கின்ற. கேள் - நண்பு. (6)

## திருநீலநக்க நாயனார் புராணம்

நீடு பூசனை நிரம்பியும் அன்பினால் நிரம்பார்
மாடு சூழ்புடை வலங்கொண்டு வணங்கிமுன் வழுத்தித்
தேடு மாமறைப் பொருளினைத் தெளிவுற நோக்கி
நாடும் அஞ்செழுத் துணர்வுற இருந்துமுன் நவின்றார்.

(கு - ரை) மாடுசூழ்புடை - பிராகாரம். தெளிவுற - மனந் தெளிய. திருக்கோயிலில் இறைவழிபாடு முடித்ததும் ஸ்ரீ பஞ் சாக்கரத்தை விதிப்படி எண்ணவேண்டும் என்பதாம். (10)

தொலைவில் செய்தவத் தொண்டனார் சுருதியே முதலாம்
கலையின் உண்மையாம் எழுத்தஞ்சும் கணிக்கின்ற காலை
நிலையின் நின்றுமுன் வழுவிட நீண்டபொன் மேருச்
சிலையி னார்திரு மேனிமேல் விழுந்ததோர் சிலம்பி.

(கு - ரை) சுருதி - வேதம். சிலம்பி - சிலந்தி. (11)

## திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம்

தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார்.

(கு - ரை) வழுவான - தவறிய. மாலாய - மயங்கிய. கரு விலங்கு - பன்றி. பறவை - அன்னம். (78)

கையதனல் ஒத்தறுத்துப் பாடுதலுங் கண்டருளிக்
கருணை கூர்ந்த
செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும் எழுதியசெம்
பொற்று ளங்கள்
ஐயரவர் திருவருளால் எடுத்தபா டலுக்கிசைந்த
அளவால் ஒத்த
வையமெலாம் உய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து
வந்த வன்றே

(கு - ரை) ஒத்து - தாளவறுதி. பெருமறைச்சிறுவர் - ஆளுடைய பிள்ளை. (103)

மாறன் பாடி எனும்பதி வந்துற
ஆறு செல்வருத் தத்தின் அசைவினுல்
வேறு செல்பவர் வெய்துறப் பிள்ளையார்
ஏறும் அஞ்செழுத் தோதிஅங் கெய்திட.

(கு - ரை) ஆறு - வழி. அசைவு - தளர்ச்சி. (191)

மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி
கோல மேனிய ராய்க்கைம் மலர்குவித்
தேல அஞ்செழுத் தோதி எழுந்தனர்.

(கு - ரை) புலர்வுறும் - விடியும். கோலம் - அழகு. ஏல - பொருந்த. (208)

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
ருதி யாரரு ளாதலில் அஞ்செழுத்
தோதி யேறினர் உய்ய உலகெலாம்.

(கு - ரை) பார்மீது தாழ்ந்து - பூமியின்மீது விழுந்து வணங்கி. உலகெலாம் உய்ய ஏறினர். ஞானசம்பந்தப்பெருமான் சிவிகையேற உலகெலாம் பெருதனபெற்று உய்ந்தன என்பதாம். (219)

மந்திரங்க ளானஎலாம் அருளிச் செய்து
மற்றவற்றின் வைதிகநூற் சடங்கின் வந்த
சிந்தைமயக் குறும்ஐயந் தெளிய எல்லாம்
செழுமறையோர்க் கருளிஅவர் தெருளும் ஆற்றல்
முந்தைமுதல் மந்திரங்கள் எல்லாந் தோன்றும்
முதலாகும் முதல்வனார் எழுத்தஞ் சென்பார்
அந்தியினுள் மந்திரம்அஞ் செழுத்து மே என்
றஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார்.

(கு - ரை) சடங்குகளில் மனமயக்கும் ஐயங்களை மறையோர்க்குத் தெளிய அருளிச் செய்து; தெருளல் - தெளிதல். மந்திரங்கட்கெல்லாம் தலையாய் அரசாய் விளங்குவது அஞ்செழுத்து. (266)

செஞ்சொல் வண்டமிழ்த் திருப்பதி கத்திசை எடுத்து
நஞ்சு போனகம் ஆக்கிய நம்பர்முன் பாடி
மஞ்சு சூழ்திரு மாளிகை வாயிலின் புறம்போந்
தஞ்செ ழுத்தின்மெய் யுணர்ந்தவர் திருமடத் தணைந்தார்.

(கு - ரை) போனகம் - உணவு. செஞ்சொல் - சொல்வகை மூன்றனுள் முந்தியது. உணர்ந்தவர் - ஞானசம்பந்தப்பெருமான். (512)

திருநாவுக் கரசருமங் கிருந்தா ரிப்பால்
திருஞான சம்பந்தர் செழுநீர் முத்தின்
பெருநாமச் சிவிகையின்மீ தேறிப் பெற்றம்
உயர்த்தவர்தாள் சென்னியின்மேற் பேணும் உள்ளத்
தொருநாமத் தஞ்செழுத்தும் ஓதி வெண்ணீற்
றொளிவிளங்குந் திருமேனி தொழுதார் நெஞ்சில்
வருநாமத் தன்புருகுங் கடலாம் என்ன
மாதவரார்ப் பொலிவையம் நிறைந்த தன்றே.

(கு - ரை) பெற்றம் - இடபம். சென்னி - திருமுடி. (619)

ஆதி மந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதி ரத்தினும் மற்றைமந் திரவிதி வருமே
பூதி சாதனர் மடத்தில்தாம் புனைந்த சாதனைகள்
சாதி யாவகை கண்டமண் குண்டர்கள் தளர்ந்தார்.

(கு - ரை) ஆதி மந்திரம் - முதன்மையான மந்திரம்; முதல்வனுடைய மந்திரமுமாம். மாதிரம் - திசை. வருமே: ஏகாரம் வினா. சாதனைகள் - மந்திரசாதனையாலாகிய தீங்குகள். குண்டர் - கீழோர். (698)

ஆழ்க தீயதென் றோதிற் றயல்நெறி
வீழ்க என்றது வேறெல்லாம் அரன்பெயர்
சூழ்க என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத் தோதி வளர்கவே.

(கு - ரை) தீயதாகிய அயல்நெறி. அரன்பெயர் - அஞ்செழுத்து. (823)

அழகினுக் கணியாம் வெண்ணீ றஞ்செழுத் தோதிச் சாத்திப்
பழகிய அன்பர் சூழப் படரொளி மறுகில் எய்தி
மழவிடை மேலோர் தம்மை மனங்கொள வணங்கி வந்து
முழவொலி எடுப்ப முத்தின் சிவிகைமேற் கொண்ட போது.

(கு - ரை) அழகினுக்கு அணியாம். வெண்ணீறு என்றது அழகு என்ற குணம் குணியாக அதற்கும் அணியாய் அழகு செய்வது வெண்ணீறு என்பது. திருநீறணியும்போது சிவமந்திரம் சொல்லிச் சாத்துதல் மரபு. (1217)

ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவா யச்சொ லாம்என்
றூனமீர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை அங்கண்
வானமும் நிலனும் கேட்க அருள்செய்திம் மணத்தில் வந்தோர்
ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக என்ன.

(கு- ரை) யார்க்கும் என்றதால் தூலபஞ்சாக்கரத்தை யருளினர்கள். ஈனம் - தாழ்வு. (1248)

## ஏயர்கோன் கலிக்காமநாயனர் புராணம்

அண்ணலார் அடிகள் மறக்கினும் நாம அஞ்செழுத் தறிய எப்பொழுதும்
எண்ணிய நாவே இன்சுவை பெருக இடையறு தியம்பும் என்றிதனைத்

திண்ணிய உணர்விற் கொள்பவர் மற்றுப் பற்றிலேன்
எனச்செழுந் தமிழால்
நண்ணிய அன்பில் பிணிப்புற நவின்றார் நமச்சிவாயத்
திருப்பதிகம்.

(கு - ரை) திண்ணிய உணர்வு - நிலையான உணர்ச்சி. (87)

குருகாவூர் அமர்ந்தருளும் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் தோழர்திருத் தொண்டருடன்
வருவார் அப்பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பால்
பெருகார்வஞ் செலஇருந்தார் சிவாயநம எனப்பேசி.

(கு - ரை) சிவனடியார்கள் நிற்பினும் கிடப்பினும் இருப்பினும், நினைப்பதும் சொல்வதும் அஞ்செழுத்தாதலின் சிவாயநம வெனப் பேசி இருந்தனர் என்றார். (158)

அன்பு நாரா அஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க அலர்தொடுத்தே
என்புள் ளுருக்கும் அடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முன்பு போலத் திரைநீக்கி முதல்வர் சாத்தும் பணிகொடுத்து
மின்போல் மறையுஞ் சங்கிலியார் தம்மை விதியாற்
கண்ணுற்றார்.

(கு - ரை) 'அஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க' சங்கிலியார் பூத்தொண்டு புரிபவர்களாதலின் அவர்கள் நெஞ்சும் அன்பு நாரிலே அஞ்செழுத்து மலரைத்தொடுத்தது என்பதாம். (226)

## தண்டியடிகள் புராணம்

பூவார் சடிலத் திருமுடியார் மகிழ்ந்த செல்வப் பூங்கோயில்
தேவா சிரயன் முன்னிறைஞ்சி வலஞ்செய் வாராய்ச்
செம்மைபுரி
நாவால் இன்ப முறுங்காதல் நமச்சி வாய நற்பதமே
ஓவா அன்பில் எடுத்தோதி ஒருநாள் போல வருநாளில்.

(கு - ரை) பூங்கோயில் - திருவாரூர்த் திருக்கோயிலின் திருப்பெயர். தேவாசிரயன் - ஆயிரக்கால் மண்டபம். செம்மைபுரி நா : நாப்படைத்த பயனை இடையறாது எய்துதலின் செம்மைபுரி நாவாயிற்று. (3)

குழிவா யதனிற் குறிநட்டுக் கட்டுங் கயிறு குளக்குலேயின்
இழிவாய்ப் புறத்து நடுத்தறியோ டிசையக் கட்டி இடைதடவி
வழியால் வந்து மண்கல்லி எடுத்து மறித்துந் தடவிப்போய்
ஒழியா முயற்சி யாலுய்த்தார் ஓதும் எழுத்தஞ் சுடனுய்ப்பார்.

(கு - ரை) குறி - அடையாளக்கோல். குலே - கரை. (5)

ஏய்ந்த அடிமை சிவனுக்கு யான் என்னில் இன்றென் கண்பெற்று
வேந்தன் எதிரே திருவாரூர் விரவுஞ் சமணர் கண்ணிழப்பார்
ஆய்ந்த பொருளுஞ் சிவபதமே ஆவ தென்றே அஞ்செழுத்தை
வாய்ந்த தொண்டர் எடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினர்.

(கு - ரை) யான் சிவனுக்கு ஏய்ந்த அடிமையென்னில் எனக் கூட்டுக. மணி நீர் - தெளிந்த நீர். (19)

மன்னன் வணங்கிப் போயினபின் மாலும் அயனும் அறியாத
பொன்னங் கழல்கள் போற்றிசைத்துப் புரிந்த பணியுங் குறை முடித்தே
உன்னும் மனத்தால் அஞ்செழுத்தும் ஓதி வழுவா தொழுகியே
மின்னுஞ் சடையார் அடிநீழல் மிக்க சிறப்பின் மேவினர்.

(கு - ரை) பொன்னங்கழல் : அம் சாரியை. (25)

## சோமாசிமாற நாயனர் புராணம்

எத்தன் மையராயினும் ஈசனுக் கன்பர் என்றால்
அத்தன் மையர்தாம் நமையாள்பவர் என்று கொள்வார்
சித்தந் தெளியச் சிவன் அஞ்செழுத் தோதும் வாய்மை
நித்தந் நியமம் எனப்போற்றும் நெறியில் நின்றார்.

(கு - ரை) முன்னிரண்டடிகளும் "கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்ப ராகில் அவரன்றே யாம் வணங்கும் கடவுளாவார்" என்ற திருமறையை நினைவூட்டுவன. (3)

## சிறப்புலி நாயனர் புராணம்

அஞ்செழுத் தோதி அங்கி வேட்டுநல் வேள்வி எல்லாம்
நஞ்சணி கண்டர் பாதம் நண்ணிடச் செய்து ஞாலத்
தெஞ்சலில் அடியார்க் கென்றும் இடையரு அன்பால் வள்ளல்
தஞ்செயல் வாய்ப்ப ஈசர் தாள்நிழல் தங்கி னரே.

(கு - ரை) எஞ்சல்இல் அடியார் - குறைவில்லா அடியார். (5)

## புகழ்ச்சோழ நாயனூர் புராணம்

கண்டசடைச் சிரத்தினையோர் கனகமணிக் கலத்தேந்திக்
கொண்டுதிரு முடித்தாங்கிக் குலவும்எரி வலங்கொள்வார்
அண்டர்பிரான் திருநாமத் தஞ்செழுத்தும் எடுத்தோதி
மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி உள்புக்கார். (39)

## நேசநாயனூர் புராணம்

ஆங்கவர் மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரான் அடியார்க் காகப்
பாங்குடை உடையுங் கீளும் பழுதில்கோ வணமும் நெய்வார்.

(கு - ரை) பாங்கு - அழகு; தகுதியுமாம். கீள் - அரை ஞாணுக்காக உடுத்தப்பெறும் உடைக்கிழி. (3)

## வெள்ளானைச்சருக்கம்

விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல்
வேந்தர்தாம் விதியாலே
இட்ட மாஞ்சிவ மந்திரம் ஓதலின் இருவிசும்
பெழப்பாய்ந்து
மட்ட லர்ந்தபைந் தெரியல்வன் தொண்டர்மேல்
கொண்டமா தங்கத்தை
முட்ட எய்திமுன் வலங்கொண்டு சென்றது
மற்றதன் முன்னுகை.

(கு - ரை) வெம்பரி - விரும்பத்தக்க குதிரை. வேந்தர் - சேரமான். இட்டமாம் - பயின்று பயன்கண்ட. தெரியல் - மாலை. வன் தொண்டர் - சுந்தரர் பெருமான். மாதங்கம் - வெள்ளானை. (36)

## திருக்களிற்றுப்படியார்

அஞ்செழுத்து மேயம்மை யப்பர்தமைக் காட்டுதலா
லஞ்செழுத்தை யாருகப் பெற்றறிந்தே - அஞ்செழுத்தை
ஓதப்புக் குள்ள மதியுங் கெடிலுமைகோன்
கேதமற வந்தளிக்குங் கேள்.

(கு - ரை) அஞ்செழுத்துமே - அகார உகார மகார விந்து நாதம் என்கிற ஐந்தெழுத்தாகிய பிரணவமே. ஆருக - ஆருதாரங் களின் வழியாக. பெற்று - குருவின் உபதேசத்தாற் பெற்று. உள்ள மதியுங் கெடில் - (கிஞ்சிஞ்ஞமான) ஆன்ம போதமுங் கெட்டால். (25)

## சிவஞான போதம்

மூன்றும் சூத்திரம், மூன்றும் அதிகரணம்.

உதாரணம் :—

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
அன்றும் புலனுய வஞ்செழுத்தை - ஒன்றறிதல்
உள்ளதே யாகி யதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லே யோர்.

(கு - ரை) ஒன்றறிந்தது ஒன்றறியாது ஆகி - ஒரு விஷயத்தை யறிந்த இந்திரியம் மற்ருெரு விஷயத்தை யறியாததாய். அன்றும் - மாறுபட்ட. புலனுய அஞ்செழுத்தை - புலன்களைச் சூக்கும பஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்கின்ற மொழிகளின் தொழிற்பாட்டை.

நான்காம் சூத்திரம், முதலதிகரணம்.

உதாரணம் :—

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்து - பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

(கு - ரை) அகார முதலிய அக்கரங்கள் அந்தக்கரணங்களைச் செலுத்துகின்றன என்பதும், நாதம் உயிரை இயக்குகிற தென்பதும் இவ்வெண்பாவில் அறிவிக்கப் பெறுகின்றன. இவற்றைப் பகாது நாட்டிற் பிரணவம் ஆம் எனவும், போதம் போன்று ஆம் எனவும் கூட்டுக. (3)

உதாரணம் :—

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவொடு நாதத்துக் - கண்ணிற்

பகரயன்மா லோடு பரம னதிதெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

(கு - ரை) எண் நிலவு - மானதக் காட்சியில் விளங்கும். பரமன் - உருத்திரன். இந்த அயன் மால் முதலியவர்கள் சுத்த வித்தையின் வைகுவோர். (4)

## ஒன்பதாஞ் சூத்திரம்

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

(கு - ரை) ஊனக்கண் - குறையுணர்வாகிய பசுபாச ஞானங் கள். ஞானக்கண் - திருவடி ஞானம். உராத்துனைத் தேர்த்து - பேய்த்தேரின் இயல்பிற்றாய். (ஊரப்படாத இயல்பினையுடைய தேர்.) விதி எண்ணுதல் சுத்த மானதம் எனப்படும் அறிவாற் கணித்தல்.

## ஒன்பதாஞ் சூத்திரம், மூன்றுமதிகரணம்

உதாரணம் :—

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில் - அஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு.

(கு - ரை) உள்ளம் - உயிர். அஞ்செழுத்தால் கண்டு - அஞ்செழுத்தை யுச்சரிக்கு முறையில் வைத்து நோக்கி. கோதண் டம் சானிக்கில் - புருவ நடுவில் சிகர யகர வகரங்கள் முறையே தத்துவம் அசிப்பொருளுமாகப் பார்த்துச் சிவோகம் பாவனை செய்யின். (1)

உதாரணம் :—

இந்துவிற் பானுவில் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணும் - உந்தவே
காட்டாக்கிற் றேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
ஆட்டானு மோதஞ் செழுத்து.

(கு - ரை) பாநு - சூரியன். உந்த - கடைய. காட்டாக்கில் தோன்றி - விறகிற்றீப்போல விடைப்பெருமான் தோன்றி. ஆள் தான் ஆம் - அடிமையாம். (2)

## சிவஞான சித்தியார்

சுபக்கம், 9-ம் சூ. 1.

ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலாம் ஓட.

சுபக்கம் சூ. 9, பாட்டு

அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு
அஞ்செழுத்தால் அங்ககர நியாசம்பண்ணி
ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத் தர்ச்சித்து
அஞ்செழுத்தால் குண்டலியின் அனலை யோம்பி
அணைவரிய கோதண்டம் அணைந்தருளின் வழிநின்று
அஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்கமதி யருக்கன்
அணையரவம் போற்றேன்றும் ஆன்மாவி லரனே. (4)

## உண்மை விளக்கம்

ஆருறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாரு வினையேது மற்றிவற்றின் - வேருகா
நானேது நீயேது நாதனட மஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று.

(கு - ரை) அன்றேதான் மாரு ஆணவம் ஏது? எனக் கூட்டுக. (3)

நற்றவத்தோர் தாங்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்
உற்றுருவாய் நின்ருட லுள்ளபடி - பெற்றிடநான்
விண்ணூர் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணு ரருளாலே சாற்று.

(கு - ரை) அஞ்செழுத்தால் உருவாய் உற்று - பஞ்சாக்கரமே திருமேனியாய். (31)

எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ்சாலே
யவாயமற நின்றாடு வான்.

(கு - ரை) எட்டும் இரண்டும் - பத்து; பத்தின் தமிழ்வரி வடிவு - ய. லிங்கத்தே - ஆன்மாவிடத்திலே. (32)

ஆடும் படிகேணல் லம்பலத்தா னையனே
நாடுந் திருவடியி லேநகரம் - கூடு
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

(கு - ரை) முடி ய பார் - திருமுடியில் யகரமாகப் பார். (33)

சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகர
மார்க்கும் யகர மபயகரம் - பார்க்கிலிறைக்
கங்கி நகர மடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்.

(கு - ரை) சிக்கன - நன்றாக. (34)

ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனில்
நீங்கா வெழுத்தே நிறைசுடரா - மாங்கார
மற்றா ரறிவரணி யம்பலத்தா னாடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்.

(கு - ரை) ஆங்காரம் - அகங்காரம் (யான் எனது என்பன.) பெற்றார் - காணப் பெற்றார். (35)

தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார - மூற்றமா
வூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(கு - ரை) துடி - தமருகம். அமைப்பு - அபயகரம். நான்ற மலர்ப்பதம் - தூக்கிய திருவடி. (36)

உரையுணர்வுக் கெட்டா வொருவன்மிகு பஞ்சாக்
கரத்தால் வரைமகடான் பாதி - பரையிடமாக்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு.

(கு - ரை) பரையிடமா - பராசத்தியாகிய திருவம்பலமே இடமாக. (39)

நாதாந்த நாடகத்தை நன்ரு வருள்செய்தீ
ரோதீ ரெழுத்தஞ்சு முள்ளபடி - தீதறவே
அஞ்செழுத் தீதாகி லழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச வருட்குருவே சாற்று.

(கு - ரை) தஞ்சம் - புகலிடம். (40)

உற்ற குறியழியு மோதுங்காற் பாடைகளிற்
சற்றும் பொருடான் சலியாது - மற்றதுகேள்
ஈசனரு ளாவி யெழிலார் திரோதமல
மாசிலெழுத் தஞ்சினடை வாம்.

(கு - ரை) குறி - எழுத்துருவங்கள். பாடை - மொழி. (41)

சிவ னரு ளாவி திரோதமல மைந்தும்
அவனெழுத் தஞ்சி னடைவா - மிவனின்று
நம்முதலா வோதிலரு ளுடாது நாடுமருள்
சிம்முதலா வோதுநீ சென்று.

(கு - ரை) நம்முதலா ஓதின் - நகாரத்தை முன்வைத்து ஓதின். (42)

அண்ணன் முதலா வழகா ரெழுத்தைந்தும்
எண்ணி யிராப்பகலற் றின்பத்தே - நண்ணி
யருளா னதுசிவத்தே யாக்கு மணுவை
இருளா னதுதீர வின்று.

(கு - ரை) அண்ணல் - 'சி.' அணு - ஆன்மா. (43)

ஆதி மலமிரண்டு மாதியா வோதிறற்
சேதியா மும்மலமுந் தீர்வாகா - போத
மதிப்பரிதா மின்பத்தே வாழலா மாறி
விதிப்படியோ தஞ்செழுத்து மே.

(கு - ரை) ஆதி - முதற்கண். மலமிரண்டு - மல எழுத்துக்களாகிய ந ம. (44)

அஞ்செழுத்தே யாகமமு மண்ண லருமறையும்
அஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்தும் - அஞ்செழுத்தே
மானந்த தாண்டவமும் யாவைக்கு மப்பாலா
மோனந்த மாமுத்தி யும்.

(கு - ரை) ஆதி புராணம் - முதன்மைபெற்ற புராணங்கள். (45)

## சிவப்பிரகாசம்

### பத்தாம் சூத்திரம்

பந்தமா னவையறுத்துப் பவுதிக முழலு மெல்லைச்
சந்தியா தொழியாதிங்குத் தன்மைபோல் வினையுஞ்சாரும்
அந்தமா திகளி லாத அஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதியாவே. (11)

திருவெழுத் தைந்தி லான்மாத் திரோதமா சருள்சிவன் சூழ்
தரநடு நின்ற தொன்றுந் தன்மையுந் தொன்மை யாகி
வரு மந மிகுதி யாலே வாசியி லாசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங் காதலார்க் கோத லாமே. (12)

ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக
ஓசைகொள் அதனில் நம் மேல் ஒழித்தருள் ஓங்கும் மீள
வாசியை யருளும் மாய மற்றது பற்று வுற்றங்கு
ஈசனில் ஏக மாகும் இதுதிரு வெழுத்தி னீடே. (13)

### பதினோராஞ் சூத்திரம்

மண்முதல் கரண மெல்லா மறுவ சத்தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக் கருத்தினா லெவையு நோக்கி [றல்
யெண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை யுணர்ந்து போற்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே.

(கு - ரை) மறுவசத்தாக்கி - பரவசமாக்கி. மாறி - சிகார முதலாக மாறி. நிறை - பரிபூரணத்தன்மை. (5)

# திருவருட் பயன்

## ஐந்தெழுத்தருள் நிலை

அருணூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருணூல் தெரியப் புகும்.

(இ - ள்.) சைவாகமங்களினது கருத்தினையும், வேதங்களினது கருத்தினையும், இவையிரண்டு மல்லாத பல கலைகளினது கருத்தினையும் கற்று வல்லோர் ஆராயப்புகின், அவையாவும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் பொருளாகிய பதி பசு பாசங்களைச் சொல்ல வந்த நூல்களாம். (1)

இறை சக்தி பாசம் எழின்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத் துள்.

(இ - ள்.) சிவமும், சக்தியும், ஆணவமும், அழகுடைத்தாய திரோதானமும், ஆன்மாவும் ஐந்தெழுத்தோரெழுத்தாகிய பிரணவத்தினுள்ளே அமைந்து நிற்கும். (2)

ஊன நடனம் ஒருபா லொருபாலாம்
ஞானநடந் தானடுவே நாடு.

(இ - ள்.) பிறவியை விளைக்கும் நகார மகாரங்களாகிய கூத்து ஒரு மருங்காகவும், வீட்டையுதவுஞ் சிகார வகாரங்களாகிய கூத்து ஒரு மருங்காகவும், யகாரமாகிய ஆன்மா இவ்விருவகைக் கூத்துக்கும் நடுப்பட்டதொன்றாகவும் இருத்தலை விசாரித்தறிவாயாக. (3)

விரியமந மேவி யவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும்.

(இ - ள்.) மகார நகாரமாகிய மலமும் திரோதமும் மிகவும் இறுகப்புணர்ந்து யகாரமாகிய ஆன்மாவை அருளிலே திரும்பாத வண்ணஞ் செய்விக்கும். அவ்வான்மா பெரிய பிணியாகிய மல விருளினின்றும் நீங்கின் சிகாரமாகிய சிவத்தினையடையும். (4)

மாலர் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாகி மீளா விடின்.

(இ - ள்.) மயக்கத்தினைப் பொருந்திய திரோதானமும் மலமு மாகிய நகாரமகாரம் இரண்டும் முதலாக உச்சரிக்கின் அவைகள் நீங்குமோ, இவற்றைக் கீழாக்கிச் சிவமாகிய சிகாரம் மேலாம் வண்ணம் மாறி யுச்சரியாதொழியின். (5)

ஆராதி யாதாரம் அந்தோ அதுமீண்டு
பாராது மேலோதும் பற்று.

(இ - ள்.) தமக்காதாரம் மாறுக வெண்ணியோ அவ்வாறு உச்சரித்தலால் வருந்தீங்கை மறுபடியும் விசாரியாமல் அந்தோ ! நகார மகாரங்களை மேலாக உச்சரிக்கும் விருப்பம். (6)

சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி.

(இ - ள்.) சிகார வகார மிரண்டினையும் முதலாக உச்சரிக்கின் பிறவித் துன்பம் நீங்கும். மோக்ஷத்தைக் காமுற்ற நீ உச்சரிக்கும் முறை இது. (7)

வாசி யருளியவை வாழ்விக்கும் மற்றதுவே
ஆசில் உருவமுமா மங்கு.

(இ - ள்.) அவ்வாறு உச்சரிக்கின், வகாரமாகிய அருள் சிகாரமாகிய சிவத்தில் யகாரமாகிய ஆன்மாவைத்தந்து பேரின்பத்திலே இருத்தும். அல்லாமலும், அவ்வருளே சிவத்திற்குக் குற்றமற்ற திருமேனியாயு மிருக்கும். (8)

ஆசில்நவா நாப்பண் அடையா தருளினல்
வாசியிடை நிற்கை வழக்கு.

(இ - ள்.) குற்றந்தீர்ந்த திரோதானமும் அருளுமாகிய நகார வகாரங்கட்கு நடுவில் நில்லாமல் வகாரமாகிய அருளினலே (யகாரமாகிய ஆன்மா) அவ்வருளாகிய வகாரத்திற்கும் சிவமாகிய சிகாரத்திற்கும் நடுவே ஞானமேயாய் நின்றழுந்துதல் முறைமை. (9)

எல்லா வகையு மியம்பும் இவனகன்று
நில்லா வகையை நினைந்து.

(இ - ள்.) இந்த ஆன்மா சிவசக்தியினை நீங்கிநில்லாது உடனாய் நிற்குந்திறத்தினைக் கருதி எல்லா உபாயங்களையும் நூல்கள் உரைக்கும். (10)

## நெஞ்சுவிடு தூது

அஞ்செழுத்தி னுள்ளீ டறிவித்தா னஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி—அஞ்செழுத்தை
உச்சரிக்குங் கேண்மை யுணர்த்தியதி லுச்சரிப்பு
வைச்சிருக்கு மந்த வழிகாட்டி—அச்சமறச்
சென்று விளக்கை யெழத்தாண்டி.

**உமாபதி சிவம்**

## கொடிக்கவி

அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்து—நெஞ்சழுத்திப்
பேசு மெழுத்துடனே பேசா வெழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.

(கு - ரை) எட்டெழுத்து - ஓம், ஆம் ஔம் சிவாயநம. ஆறு எழுத்து - ஓம் நமசிவாய. நாலெழுத்து - ஓம் சிவாய. பிஞ்செழுத்து- வ. பெருவெழுத்து - சி. பேசும் எழுத்து - வ - பேசாவெழுத்து - சி. (4)

நமசிவாயச சிவதராயச யஜுர் 4·5-8·1.
ஸர்வலிங்காயநம: சிவாயநம: சிவலிங்காயநம:
ஓமித்யேகாக்ஷரே மந்த்ரே ஸ்திஸ்ஸர்வ கதச்சிவ:
யாநி மந்த்ராணி ஸலக்ஷ்மாணி மாலா மந்த்ராண்யசேஷத:
ஓந்நமச்சிவாயேதி ஸம்ஸ்திதாநி யதாக்ரமமி
மந்த்ர ஷடக்ஷரே ஸூக்ஷ்மே பஞ்ச ப்ரம்மதநுச்சிவ:
வாக்ய வாசகபாவேன ஸ்திதஸ்ஸாக்ஷாத் ஸ்வபாவத:

**தரும சங்கிதை**

சிவஜ்ஞானி யாவந்தி வித்யா ஸ்தாநாநி யாநிச
ஷடாக்ஷரஸ்ய ஸூத்ரஸ்ய தாநி பாஷ்யம் ஸமாஸத:
கிதேஸ்ய பகுபிர்மந்த்ரைஹி சாஸ்த்ரைர்வா பகுவிஸ்தரை:
யஸ்யோந்நமச்சிவாயேதி மந்த்ரோயம் ஹ்ருதி ஸம்ஸ்தித:

தேநாதீதம் ச்ருதம் தேநக்ருதம் ஸர்வ மநுஷ்டிதம்
நமஸ்காராதி ஸம்யுக்தம் சிவாயேத்ய க்ஷரத்ரயம்
ஜிஹ்வாக்ரே வர்த்ததே யஸ்ய ஸபலதேஸ்ய ஜீவிதம்
அத்ய ஜோவா தமோவாபி மூர்க்கோவா பண்டிதோபிவா
பஞ்சாக்ஷர ஜபே நிஷ்டோ முச்யதே பாப பஞ்சராத்.

**வாயு சங்கிதை**

சிகாரம் சிவரூபந்து வகாரம் சக்தி ருச்யதே
யகாரம் ஆத்மரூபந்து நகாரம் க்ரந்தி ரூபகம்
மகாரம் மலரூப்பஞ்ச இத்யார்த்த: பஞ்சவர்ணக:

**ஆகம ச்லோகம்**



# தேவாரப் பரிசுகள் விவரம்



நாட்டின்கண் தேவாரத்தைப் பண் ஒன்ற இசையுடன் பாடும் வழக்கம் விருத்தியாதலை நோக்கமாகக் கொண்டு திருப்பனந்தாள், காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள் திருவாரூரில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர் தேவாரப் பரிசு ஒன்றையும், சீகாழியில் ஸ்ரீ திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் தேவாரப் பரிசு ஒன்றையும், திருவையாற்றில் ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பரிசு ஒன்றையும் ஆண்டுதோறும் அளிக்க ஏற்படுத்தி யிருக்கிறார்கள். பரிசுகள் தங்கப்பதக்கங்கள் வடிவமாக வழங்கப்பெறும்.

## பரிசளிப்புக்குரிய விதிகள்

ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர் தேவாரப் பரிசின் தேர்வுக்குத் திருவாரூர் உயர்நிலைப் பள்ளியில் 4, 5, 6-ஆம் பாரங்களில் படிக்கும் மாணாக்கர் மாணாக்கிகளும், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் தேவாரப் பரிசின் தேர்வுக்குச் சீகாழி உயர்நிலைப் பள்ளியில் 4, 5, 6-ஆம் பாரங்களில் படிக்கும் மாணாக்கர் மாணாக்கிகளும், ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பரிசின் தேர்வுக்குத் திருவையாற்றிலுள்ள உயர்நிலைப் பள்ளியில் 4, 5, 6-ஆம் பாரங்களில் படிக்கும் மாணாக்கர் மாணாக்கிகளும் முறையே வர உரியர்.

சுந்தரமூர்த்தி நாயனர் தேவாரப் பரிசுக்கு அவருடைய தேவாரங்களில் 125 பாசுரங்களும், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர்

தேவாரப் பரிசுக்கு அவர் அருளிய தேவாரங்களில் 133 பாசுரங்களும், திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பரிசுக்கு அவருடைய தேவாரங்களில் 75 பாசுரங்களும் முறையே பாடங்களாக அமைக்கப் பெற்றுள்ளன.

ஆண்டுதோறும் தேர்வு (பரீக்ஷை) திருப்பனந்தாளில் ஸ்ரீ காசி மடத்துத் தலைவரவர்களால் நடத்தப்பெறும்.

பரீக்ஷையில் கலந்துகொள்ள விரும்புவோர் காசி மடத்துக்கு விண்ணப்பம் செய்துகொள்ள வேண்டும். பின்பு பரீக்ஷையில் கலந்துகொள்ள அனுமதிச் சீட்டு காசி மடத்திலிருந்து வரும். அனுமதிச் சீட்டுப் பெறுபவரே தேர்வுக்கு வரலாம்.

ஒவ்வொரு பரீக்ஷையிலும் முதன்மையாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றவர் முறையே திருவாரூரில் பங்குனி யுத்தரத்தன்று தியாகேசர் திருமுன்பும், சீகாழியில் திருமுலைப்பால் உற்சவ தினத்தில் ஸ்ரீ தோணியப்பர் திருமுன்பும், திருவையாற்றில் ஆவணிமூலத் திருவிழாவில் ஸ்ரீ ஐயாறப்பர் திருமுன்பும் நேரில் வந்து பரிசைப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

ஒருமுறை பரிசு பெற்றவர் மறுபடி தேர்வுக்கு வர உரியரல்லர்.

பாட விவரங்கள், தேர்வு காலம் முதலியன தெரிந்துகொள்ள விரும்புவோர் அடியிற் கண்ட விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

(உத்தரவுப்படி)

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்

S. பொன்னுசாமி முதலியார்
காறுபாறு.